# பன்னீர் மணம்

(உமர்கய்யாம் வாழ்க்கையிலிருந்து)

ஆசிரியர் :

ஆர். பி. மல்லாரி




பிரசுரம் :

**தாஜ் பதிப்பகம்**

**11, சுபேதார் ஹுசைன் தெரு, சென்னை-14.**

*முதற் பதிப்பு, ஜனவரி, 1958.*



*எமது அடுத்த வெளியீடு :*

மயிலாசனம்—சரித்திரக் காட்சிகள்

## ஆசிரியரின் இதர நூல்கள்

நாகரிகம்.
நீடூழி வாழ்க!
விளக்கேற்றி வைத்தவள்.
ஐந்து குழந்தைகளின் அன்னை.
மழைச் சித்திரம்.

விலை ரூ. 1. 25



Printed by HajiG Sahib at the Haji Press, 2, Javarusain St, 2,
Madras-14.

# சிறப்புரை



என்னை ஒரு கவி, அல்லது எழுத்தாளன் என்பதை விட ஒரு கலைஞன் என்று இச்சந்தர்ப்பத்தில் அறிமுகப் படுத்திக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன் சென்னை சித்திரவேலை வித்தியா சாலை (School of Arts and Crafts) யில் சித்திரம் பயிலும் காலத்தில் "உமர்கய்யாம்" என்ற சித்திரம் என கண்களில் பட்டது. அதில்—உமர்—தன் கைகளில் ஒன்றை மதுவிலும் மற்றொன்றை மாதின் பேரிலும விரித்து மந்தகாசத்துடன் வீற்றிருந்தார்.

காலம ஓடியது-ஓடிககொண்டேயிருக்கிறது-தற்சமயம் நான் "விககிரமாதித்தன" என்ற சரித்திரக் கதையை சினிமா படமாககி வருகிறேன்.

இசசநதர்ப்பத்தில் திரு. 'மல்லாரி' அவர்களின் புத்தகத்துககு ஒரு சிறப்புரை எழுதுவது எனக்கு ஒரு வாய்ப் பாகும.

உமர்கயயாம என்றவுடன் அன்று என் ஞாபகத்திற்கு வந்தது—'மஙகையும மதுவுந்தான.' ஆனல் இன்று இந்த நூலைப் படித்த பொழுதுதான் உமர் இலககிய மேதை மட்டுமல்ல—அவர் தத்துவ ஞானி—இயற்கை கவிஞர் என்பது புலனுயிறறு. இதோ—திரு. மல்லாரியின் சில பன்னீர் துளிகள.

"அதோ ஒரு சிலந்திப் பூச்சி அழகாக வலை விரித்திருக்கிறது...அது வலையென்ரு சொல்லும்!...அல்லது கலையென்று பேசுமா? அதன் வாழ்வின் தேவை அது...ஈ வந்து அதில் விழுகிறது. அதன் உயிரை சிலந்தி உறிஞ்சிவிட்டால் பாவமா?...பின், சிலந்தி வாழ்வது எப்படி?..."

"இந்த கணப்புச் சட்டியின் வெப்பம் உன் மோகத்தை விட குளிர்ச்சியான தென்று சொல்லுகிறேன்......"

"உன் சிறுமைக்கும் அவர் பெருமைக்கு முள்ள வித்தியாசத்தை! நான் அவரை மயக்கப் பார்த்தேன்; மறுத்துவிட்டார். கெஞ்சினேன்; கேட்கவில்லை. மிரட்டினேன்; மருளவில்லை. எதிர்த்தேன்; ஏமாறவில்லை. நீயோ?...வெறுக்கிறேன்; விலக மாட்டேனென்கிருய்!';

"குழந்தைகளை மலர்களுக்கு ஈடாக அல்லவோ அவர் மதிக்கிருர். எந்தத் தேசத்துக் குழந்தையாக யிருந்தால் என்ன, அவைகள் ஒன்று சேர்ந்தால் சற்று நேரத்தில்

அன்னியோன்னியமாகி விடுகின்றன. காரணம் அவைகள் பேசுவது ஒரே பாஷை—சிரிப்பு!''

''ஒரு தேன் சிட்டு வாழ்வது பற்றி மனிதனுக்கு என்ன தெரியும்? தன்னை ஆராயும் அவனைப்பற்றி அது என்ன நினைக்கிறது என்று ஆராய்ச்சியாளர் சொல்ல முடியுமா? கண் முன்னே பகட்டாக கவலையற்றுத் திரியும் கேவலம் ஒரு தேன் சிட்டு நிலையே இப்படியென்றால், கண்ணுக்குப் புலனுகாத கடவுளைப்பற்றி மனிதன் எவ்வாறு அறிய முடியும்? இதற்காகத்தான் அவன் மத நூல்களையும் பழமையான சாத்திரங்களையும் சான்ருகக் கொள்ளுகிருன்.''

''அறிவுள்ள வைத்தியர் யார் தெரியுமா?... 'தம்மை விடப் பெரிய வைத்தியருக்கு வழி விடுவதே தம் கடமை என்று உணர்கின்றவர்தான்! இயற்கைதான் அந்தப் பெரிய வைத்தியர்.''

''கடன் கொடுப்பதைவிட தானம் கொடுப்பது மேல். இரண்டிலும் ஒரே நஷ்டம்தான்.''

''அந்தி வானத்தைவிட அழகானதும், அழியக் கூடியதும் உலகில் ஒன்று உண்டானால் அது பெண்ணின் இனிய முகந்தான் என்பதை நீ நிரூபிக்கிருய்.''

'''மங்கையும் மதுவுந்தான் என் குறிக்கோள்' என்று என்னுடைய நண்பர்களில் பலரும் திரை மறைவில் என்னைத் தூற்றினார்கள்—தூற்றுகிருர்கள். என் முன்னலேயே தூற்றினாலும் முகம் சுளிக்க மாட்டேன். ஆண்டவன்தான் என் காதலி; அவனிடம் நான் செலுத்த விரும்பும் பக்தியே எனக்குப் போதை யூட்டும் மது! என்னை விட்டுப் பிரிந்து போன என்னுடைய ஆடு அஸ்கல்புக்கு இது தெரியும்... நல்ல பண்பாடு, தெளிந்த அறிவு, இதய பூர்வமான பிரார்த்தனை— இவை மூன்று மிருந்தால் மன நிம்மதி மாத்திரமல்ல, தியாக புத்தியும் தானே ஏற்படும். தன்னுடைய இதழ்களையே கசக்கிப் பிழிபவர்களுக்கும் பன்னீர் மணத்தை அளிக்கிறதே ரோஜா மலர். அத்தகைய தியாக புத்தி ஏற்படும்! நான் வருகிறேன்... என் கண்களில் துளிர்க்கும் கண்ணீரை, ஏழை மக்களின் கண்ணீருடன் கலந்து, அவர்களது சுக துக்கங்களில் பங்கெடுத்துக் கொள்வதே, இனி என்னுடைய எஞ்சிய வாழ்வின் பன்னீர் மணம்!''

திரு 'மல்லாரி'யின் இப் ''பன்னீர் மணம்'' உமர்கய்யாமின் வாழ்க்கை வர்ணனை என்று மட்டும் கூறிவிட முடியாது. ஓர் உயர்ந்த காவியமென்றே வரவேற்றுப் பாராட்டுகிறேன்.

பாரத் ஸ்டுடியோ
சென்னை-2, 30-12-57.

வே. நமசிவாயம்.

# சமர்ப்பணம்

"மரத்தின்மேல் விழும் கோடரியின் ஒவ்வொரு வெட்டும் மரத்தை வீழ்த்திக் கொண்டிருப்பது போல, மனித உடலின் மேல் விழும் ஹிருதயத்தின் ஒவ்வொரு துடிப்பும் மனிதனை வீழ்த்திக்கொண்டே போகிறது என்பதை அறியாமல், இந்த உலகமக்கள் வாழும் சொற்ப நாட்களைக்கூட மகிழ்ந்து வாழ்வதில்லையே!" என்று உமர்கய்யாம் வருந்தினார்.

அவரைச் சரியாக உணர்ந்து கொள்ளாத சிலரும், பொறாமைப் பேய் வயப்பட்ட பலரும், அவருடைய திறமைகளை எல்லாம் உதாசீனப் படுத்தி, "மதுவும் மங்கையுமே உமரின்வாழ்க்கை!" என்று தூற்றினர்.

அவர்களைப்போன்ற குறுகிய உள்ளம் படைத்தவர்கள் உமர் காலத்தில் மட்டுமல்ல, இன்றும் பன்மடங்காகப் பெருகி, பதினாறும் பெற்று, வாழ்கிறார்கள். கலையென்ற பெயரால் கலைகளாகப் பிலுக்கித் திரியும் இந்த ரசிக அன்பர்களுக்கு இந்த நூலைச் சமர்ப்பிக்கிறேன், இவர்களுடைய வாழ்க்கையை உமர்கய்யாம் திருத்துவார் என்ற நம்பிக்கையுடன்!

—ஆர். பி. மல்லாரி.

இந்த நாடகத்தில்

# இவர்களைச் சந்திக்கிறோம்

---

**உமர்கய்யாம் :**—ஈரான் பெற்றெடுத்த ஒப்பற்ற அறிஞர்.

**சுல்தான் மாலிக்ஷா :**—உமர்கய்யாம் காலத்தில் சுல்தான்களாக யிருந்த இருவரில் முதல்வர் ; உமரை நேசித்தவர்.

**நிஜாமுல்-முல்க் :**—சுல்தானின் மந்திரி ; உமரின் திறமையில் நம்பிக்கை கொண்டவர் ; அவர் உயிர் நண்பர்.

**கியாஸ்பேக் :**—சுல்தான் தளபதிகளில் ஒருவர் ; பொறாமை காரணமாக உமரிடம் பகைமைப் பாராட்டியவர்.

**அமீர், குலாம், கரீம், ரஹீம் :**—கியாஸ் பேக்கின் ஆட்கள்.

**அஸ்கல்ப் :**—உமரால் வளர்க்கப்பட்டு, அவருடன் பல ஆண்டுகள் வாழ்ந்து, அவர் காலடியில் மரித்த ஆடு.

**மெஹ்ருன்னிஸா :**—தன்னுடைய அசாதாரண அழகால் உமரை அடிமைப் படுத்திவிடலாம் என்று ஆரம்பத்தில் அகங்காரம் கொண்ட நடனவல்லி ; பிறகு அவர் தூய அன்புக்குமுன் அடிமையானவள்.

**ஸுல்தானா :**—சுல்தான் மாலிக்ஷாவின் பட்டமகிஷி. உமரின் கவிதைகளில் லயித்து, பரவசமடைந்தவர்.

**மும்தாஜ், ஷௌபின், ஜரீனா, ஸாரிதா :**— மெஹ்ருன்னிஸாவின் தோழிகள்.

**ஹஸீனா :** வைத்திய விடுதியில் சேர்க்கப்பட்ட அநாதைச் சிறுமி ; சொந்த பேத்தியைப்போல் உமரிடம் ஒட்டிக் கொண்டவள்.

# பன்னீர் மணம்

## (உமர்கய்யாம் வாழ்க்கையிலிருந்து)

“மன் பந்தயே ஆஸியம் ரஜாயே
தொ குஜாஸ்த்
தாரீக் திலம் நூரெ ஸபாயே
தொ குஜாஸ்த்
மாரா தூ பஹிஷ்த் அகர் பெ
தாஆத் பக்ஷீ
ஈ(ன்) மஜ்த் புவத்லுத் பொ அதாயே
தொ குஜாஸ்த்”

பன்னீர் மணத்தை உலகெங்கும் நிரந்தரமாகத் தெளிக்கும் வகையில் உமர்கய்யாம் புனைந்த பல ருபா யிய்யாத்களில் இது ஒன்று. ‘உன் அருள் பொருத்த மானதுதானா?’ என்று ஆண்டவனையே வினவுகிறார். “நான் பாவ மூட்டையைச் சுமக்கும் அற்ப மானிடன்தான்; அறியாமை இருள் என் அகம் முழுவதும் சூழ்ந்திருக்கிறது. ஆனால் இவைகளிடமிருந்து நான் விடுபடவேண்டாமா? அதற்கான உன்னுடைய கருணை எங்கே?” என்று பேரின் பத்தைப்பற்றி வினவும் இந்தக் கவிஞரை, பலர், “மது மங்கையின் பின்னே அலைந்து திரிந்தவர்!” என்று வர்ணிக் கிறார்கள்! “நான் உனக்கு அடங்கி நடந்து, நீ வகுத்துள்ள நன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து, உனக்கு வணக்கம் செலுத்தி, சுவர்க்கத்தை அடைகிறேன்; இதில் உன் தானதருமம் ஒன்றுமில்லை. என் உழைப்புக்குக் கூலிதான் தருகிறாய். அப்படி யிருக்க, உன்னைக் கருணைக் கடல் என்று வர்ணிக்கிறார்களே, அது எப்படி என்று எனக்குத் தெரிய வில்லையே?” என்று ஆண்டவனையே இவர் வினவும் போது, பதிலில்லாது திகைக்கிறோம்!

இப்படியெல்லாம் சற்று முற்போக்கான கருத்துக்களை எடுத்துரைத்ததால், அவருடைய நாட்டிலேயே பலரால் இவர் பழிக்கப்பட்டார். இவரது காலத்தில் கிரேக்க நூல்கள் அரபியில் மொழி பெயர்க்கப்பட்டிருந்தபடியால், அந்த நூல் களின் விரும்பத்தகாத தத்துவங்களை எல்லாம் இவர் தம்முடைய பாடல்களில் புகுத்துகிறார் என்று இமாம் கஸ்ஸாலீ போன்ற அறிஞர்களும் இவரைத் தூஷித்தனர்.

இவரை ஒரு கவிஞர் என்று ஏற்றுக்கொள்ளவும் பாரஸீக மக்கள் பலர் விரும்பவில்லை. கிரேக்க தத்துவத்தைப் பின்பற்றும் ''பில்ஸிப்'' என்று கூட உமரை இளக்காரமாக அழைத்தார்கள்.

''நுஸ்ஹத்துல் அர்வாஹ்'' (ஆத்மாவின் இன்பம்) என்ற நூல் எழுதிய ஷஹ்ராஸுரீ என்பவர் உமரைக் கோப முடையவர் என்றும், அற்ப புத்தியுள்ளவர் என்றும் எழுதி இருக்கிருர். பதினைந்தாம் நூற்ருண்டில், யார்அஹ்மத் என்பவர் ''தாஹ் பஸ்ல்'' என்ற நூலைத் தொகுத்தார். அதில் உமரைப்பற்றிய விசித்திரமான கதைகள் சேர்க்கப்பட்டன. ஆனல், அல்லாமா ஷிப்லீ எழுதிய 'பாரசீக நாட்டுக் கவிதை' என்ற ''ஷேருல் அஜம்'' என்ற நூலில்தான் உமர் கய்யாமைப் பற்றிய ஆதாரபூர்வமான தகவல்கள் கிடைத்திருக்கின்றன. ''உமர்கய்யாம் மது குடிக்கவே செய்தார்; ஆனல் ஆத்ம ஞானியைப் போலத்தான் குடித்தார்!'' என்கிருர் அல்லாமா ஷிப்லீ. அந்தக் காலத்தில் (ஸூஃபி) ஞானிகள் பக்தி மார்க்கத்தை மதுவென்றும், தொழும் இடத்தை மது கிடைக்கும் மாளிகை என்றும், எல்லாம் வல்ல இறைவனைக் காதலி என்றும், தார்மீக வழிபாட்டை மது நிறைந்த 'ஸாஃகி' என்றும் உருவகப் படுத்தியே எழுதி வந்தார்கள்!

கவிஞரின் முழுப்பெயர் சற்று நீளமானது—கியாஸுத்தீன் அபுல் ப(த்)தஹ் உமர் பின் இப்ராஹீம் அல்கய்யாமீ அந் நைஷாப்பூரீ. பெற்ரேர் இட்டபெயர் கியாஸுத்தீன்; உமர் வழக்குப் பெயராகச் சேர்ந்தது; 'அபுல் ப(த்)தஹ்' என்ருல் 'வெற்றிமாலை சூடும் தந்தை' என்று பொருள்; கய்யாம் தொழிற் பெயர்; கய்யாம் என்ருல் கூடாரம் அடித்துக் கொடுப்பவன்; இவர் தந்தை இந்தத் தொழில் செய்து வந்தபடியால், இவருக்கும் இந்த அடைமொழி! நைஷாப்பூர் நகரத்தில் இருந்தபடியால், அப்போதைய சம்பிரதாயப் பிரகாரம் ஊர்ப் பெயரும் சேர்க்கப்பட்டது.

இவர் பிறந்த தேதிக்குச் சரியான குறிப்பு களில்லை; என்ருலும் கி. பி. 1020-ல் தான் இவர் பிறந்தார் என்று பலர் கூறுகிருர்கள். ஒரு ஐந்து வருடம் முன்னதாகவும் இருக்கலாம் என்பது வேறு சிலர் கருத்து. ஆனல், இவர் காலமான வருடத்தைப்பற்றி அவ்வளவு சர்ச்சை இல்லை. கி. பி. 1123-ல் ஆண்டவன் அடி சேர்ந்தார் என்பதைப் பலரும் ஒப்புக் கொள்ளுகிருர்கள். ஆக 103-வது வயதுவரை உமர் கய்யாம் வாழ்ந்திருந்தார் என்றும் தெரிகிறது. அந்தக் காலத்தில் இந்த வயது சாதாரணம்! காரணம், அவர்கள்

கபடமற்று கவலையற்று ஆனந்தமாக வாழ்ந்ததுதான்! இதனால், உமர் வாழ்க்கையில் நிரந்தர இன்பம் இருந்ததாகக் கொள்ளுவதற்கில்லை. இவருடைய தத்துவ சாஸ்திர விளக்கம் இஸ்லாத்தின் நெறிக்கு முரணாக இருந்ததாக எண்ணிய ஜனங்கள் ஆத்திரப்பட்டு, பல சந்தர்ப்பங்களில் முரட்டுத் தனமாக நடந்து கொண்டதுண்டு. ஆனால், உமர் கய்யாம் நிதானத்தை இழக்காமல், முன்னேற்றம் விரும்பாத மக்களைக் கண்டு இரங்குவார்.

''ஆகாயத்தில் தினமும் ஆயிரக்கணக்கான புள்ளினங்கள் பறந்து சென்றாலும், ஒன்றை ஒன்று அடித்துக் கொண்டு பூமியில் விழவில்லையே! இந்த மனிதர்களிடம் மட்டும் ஏன் இந்தச் சண்டை?'' என்று அவர் புரிந்து கொள்ள முடியாமல் மனமுருகுவார். அதனால்தான், ''மனத்திலிருந்து துவேஷத்தை நீக்க, உலகில் ஒரே ஒரு மருந்துதான் இருக்கிறது; அதுதான் மன்னிப்பு!'' என்று ஆணித்தரமாக எடுத்துரைத்தார். தாமே தவறு செய்திருந்தாலும், கற்றுணர்ந்த பெரியோர்கள் என்று எண்ணப்படுவோர் தம்மை மன்னிக்க வேண்டுமென்பதே அவர் முறையீடு!

பகைமை பாராட்டுவதைவிட பகைவனை மன்னித்து விடுதலே செலவு இல்லாததாகும். மன்னித்து விட்டால், கோபம் என்ற வீண் விரயமில்லை; விரோதம் என்ற விலை இல்லை; சாந்தியின்மை என்ற நஷ்டமில்லை!

ஒரு 'வீரர்' கேட்டார்:

''தீமை செய்தவனைப் பழி வாங்க, வேண்டாமா?''

உமர் சிரித்துக் கொண்டார்.

''பழி வாங்கத்தான் வேண்டும். நானும் அதிக வீரமாகப் பழி வாங்கும் முறையைத்தான் கூறுகிறேன்—தீமை செய்தவரை அலட்சியம் செய்துவிடு; அதுதான் பழிவாங்குவதின் ஆரம்பம். மன்னித்துவிடு; அதுதான் பழி வாங்குவதின் முடிவு!''

''எனக்குச் சரியாக விளங்கவில்லையே!''

''பகைவனை மன்னிக்காதவன் உலகில் அடையக்கூடிய மிக உயர்ந்த இன்பத்தை இன்னும் அறியாதவனே. தவறிழைத்தல் மனித குணம்; மன்னித்தல் தேவகுணம். ஆண்டவன் நம்மை மன்னிப்பதுபோல, நாமும் பிறரை மன்னித்தல் வேண்டும்!''

ஆண்டவன் அன்புடன் அருள் பாலித்த தம்முடைய நீண்ட ஆயுட்காலம் முழுவதும், கவிஞர் கருணையின் வடிவாகவே வாழ்ந்தார். இவருடைய ஆத்ம குரு ஹக்கீம் இப்னு

னீனு என்பவர். "முன்னேற்றமே வாழ்வின் நியதி. மனிதன் இன்னும் மனிதனுகவில்லை. சுயநலமே இதன் காரணம். நாம் விரும்பும் வகையில் நம்மை செம்மைப்படுத்திக் கொள்ள இயலவில்லை யென்முல், நாம் விரும்பும் வண்ணம் பிறர் இருக்க வேண்டுமென்று எவ்வாறு எதிர் பார்க்க முடியும்?" என்ற குருவின் கருத்து, உமரை மிகவும் கவர்ந்தது. "உள்ளத்தில் ஆண்டவனுக்கு இடமளிக்க வேண்டும்; ஷைத்தானுக்கு இடமில்லை!" என்ற அவர் கொள்கையின்படி, தம்முடைய வாழ்க்கைப் பாதையில், உமர் வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டே, சிரித்தவாறு முன்னேறினுர். பாதையில் தடையாகத் தென்பட்ட கற்களை, பாதையைச் செப்பனிடுப் படிக்கல்லாக அமைத்துக் கொண்டார்!

கவிதை இலக்கியம் என்று தனியாக இவர் ஒன்றும் எழுதாவிட்டாலும், "ரூபா யிய்யாத்" ஒன்றுதான் இவருடைய அமர காவியமாக நிலைத்து விட்டது. ஆனுல், அரசியல் துறையிலும் விஞ்ஞானத் துறையிலும், இவர் இதற்கு சமமான பல நூல்களை எழுதி இருக்கிருர். கணிதம், வான ஆராய்ச்சி, மருத்துவம், பொருளாதாரம், அரசியல், பஞ்சாங்கம், ஆருடம் போன்ற பல சாஸ்திரங்களிலும் வல்லுநரான இவர், பல அருமையான கிரந்தங்களை உலகுக்கு அளித்திருக்கிருர்.

அந்தக் காலத்திலேயே அல்ஜிப்ரா பற்றி ஒரு நூல் எழுதினுர். "யூக்லிட் விளக்கத்தின் சங்கடங்கள்", "பௌதிக சாஸ்திரம்", "உலகத் தொல்லைகளிடையே இன்ப வாழ்க்கை", "நௌரோஸ் நாமா" போன்ற நூல்களையும் எழுதினுர். அரபி மொழியில், பல பைத்துகள் (பாடல்கள்) இயற்றினுர். ஆருடக் கலையிலும் இவர் தனித்திறமையுடையவராயிருந்தார்.

இவர் காலத்தில் சுல்தான்களாக இருந்த மாலிக்ஷா, சஞ்சர் முதலியவர்களின் வாழ்க்கையைப் பற்றி இவர் முற்கூட்டியே கணித்த நிகழ்ச்சிகள் ஆச்சரியப்படும் வகையில் உண்மையாக உருவெடுத்தன. தற்காலத்தில் கிரேக்க காலண்டர் என்று புகழப்படுவது, ஆதியில், "தக்வீமெ யூனுனி" என்று இவர் தொகுத்ததை அடிப்படையாகக் கொண்டதே! இப்னுல் கித்பி போன்ற பல அறிஞர்கள் இதை நன்ருக ஆராய்ச்சி செய்து பாராட்டியிருக்கிருர்கள்.

வானசாஸ்திர விற்பன்னர்கள் பலர், "தக்வீம்" என்ற பஞ்சாங்கத்தை அபிவிருத்திச் செய்ய இவர் உதவியை நாடினுர்கள். 'அவ்க் காத்துஸ் ஸலாத்' என்னும் தொழுகை நேரங்களையும் இவர் தொகுத்துக் கொடுத்தார். துரதிருஷ்ட

வசமாக இவருடைய நூல்களிற் பல பத்திரப்படுத்தி வைக்கப்படவில்லை.

உமர்கய்யாமுக்குத் தேச சஞ்சாரம் செய்வதில் பெருத்த விருப்பமுண்டு. "குல் ஸீரு பில்அர்ஸி" என்ற வாக்கியத் தொடரின் கருத்துப்படி, உலகமெல்லாம் இவர் சஞ்சாரம் செய்யவும் விரும்பினார். அந்தக் காலத்தில் பிரயாணம் செய்வது மிகவும் கடுமையானது. என்றாலும், புனித ஹஜ் யாத்திரை செய்து முடித்தார். இந்தியாவுக்கும் கூட வந்து சென்றார் என்று சொல்லுபவரும் உண்டு. உள்ளூர்வாசிகளின் கோபத்துக்கு அஞ்சி இவர் ஊர் ஊராக அலைந்தார் என்றும் சொல்லுகிறார்கள்! ஆனால், இத்தகைய பிரயாணங்களின் போதுதான் அவர் ஆண்டவனைப் பற்றி நன்றாக அறிய முடிந்தது என்று கூறி இருக்கிறார். அப்போது அவர் விளக்கமாகச்சொன்ன தப்ஸீர், ஹதீது உபதேசங்கள் விலை மதிப்பற்றவை,

ஆண்டவன் நமது ஆசைகளைப் பூர்த்தி செய்யாமலிருக் கலாம். ஆனால், நாம் அபாயத்தை எதிர்க்கும்போது, அவன் உதவி செய்ய வராமலிரான். ஆதலால், தைரியமாக நேர் மையான வழிகளில் முன்னேறுபவர்களுக்கு, எப்போதும் இறைவன் துணையுண்டு. ஒரு நாளும் வீழ்ச்சி கிடையாது.

"ஒவ்வொரு சமயத்திலும் நாம் விழுவதும் உற்சாகமாக எழுவதற்கே! வீழ்ச்சிகளில் பெரும் வீழ்ச்சி தன்னம்பிக்கை யை இழந்து விடுவதே! ஆகவே, வாழும் நாட்களை ஆனந்த மாக அனுபவித்து வாழுங்கள்!" என்று உபதேசித்துக் கொண்டே, அவர் தூய இதயத்துடன் தம் வாழ்க்கையில் முன்னேறினார். இதயம் ஒரு பரிசுத்தமான ஆகாயம் போன்றது என்பது இவர் கருத்து. வானத்தின் நிர்மலமும் விசால மும் உண்டு. சில சந்தர்ப்பங்களில் அங்குமிங்கும் மேகங்கள் தென்படலாம். ஆனால், விரைவில் அவை சிதறிப்போன பிறகு களங்கமற்ற நீல நிறந்தான் பிரகாசிக்கும். அதேபோல இதயத்தில் அவ்வப்போது மாசு படியலாம்; ஆனால், விரைவில் சிதறிப் போகத்தான் வேண்டும்.

தம் வாழ்க்கை முழுவதும் இவர் பிரமச்சாரியாகவே வாழ்ந்தாலும், ஒப்புவமையற்ற திறமையுடன் தனி ஜோதி யாகத் திகழ்ந்தாலும், இவரைப்பற்றிப் பலர் பல கதைகள் கட்டிவிட்டார்கள். "மது, மங்கை—இவைதான் இவருடைய ஜீவநாடி!" என்று இப்போதும் ஒரு சிலர் நம்புகிறார்கள். மங்கையின் பால், மதுவின்பால், இவர் கொண்ட காதலுக்கு இவர் தாஸனாக இருந்தார் என்றும் சொல்லுகிறார்கள்

ஆனால், உண்மை அதுவன்று. "கருமியின் காதல் கால விரயமாக இருக்கும்; தொழில் மேதையின் காதல் நேரச் சிக்கனமாக இருக்கும்; கலைஞனின் காதல் அபூர்வமாக இருக்கும்; ஆத்ம ஞானியின் காதல் அரூபமாயிருக்கும்!" என்ற தம் கருத்தைத் தான் திடமாக நம்பினார்!

ஹக்கீம் கியாஸுத்தீன் அபுல் ப(த்)தஹ் உமர் பின் இப்ராஹீம் அல் கய்யாமீ அந் நைஷாப்பூரீ ஒரு கவிஞர் மாத்திரமல்ல, ஆத்ம ஞானியும் கூட! காதல், இவர் முன் அரூபமாயிருந்தது! சிரம் பணிந்து பணியாற்றியது! சுலப மாகச் சிரித்து, வாழ்க்கையை அனுபவித்து, இவர் வாழ்ந் தது இவருடைய கள்ளங் கபடமற்ற ஹிருதயத்தைப் பிரதி பலித்தது. சாதாரண ஹாஸ்யங்களுக்கும் வாய்விட்டுச் சிரித்து, தம்முடைய நண்பருக்கு மகிழ்ச்சியை அளிப்பார். "குழந்தைகளின் பாஷைதான் சிரிப்பு!" என்பது இவர் தத்து வம். எந்த நாட்டுக் குழந்தையாக இருந்தாலும், சிரிப்பைப் புரிந்து கொள்ளுகிறதல்லவா?

இமாம் முவஅஃப்பிக் என்ற பெரியாரிடம் இவர் சமயக் கல்வி கற்றார். குர்ஆன் ஷரீஃபை மிகவும் நன்றாகப் பயின்றார். அதைப் பற்றி எழும் பிரச்னைகளில் பங்கெடுத் துக் கொள்ளும் அளவுக்கும் இவர் பாண்டித்யம் பெற்றிருந் தார் என்பது இவர் வாழ்க்கையில் நடந்த பல சம்பவங்களி லிருந்து புலனாகிறது. சுல்தான் சஞ்சரின் மந்திரி ஹஜரத் ஷஹாபுல் இஸ்லாம் அப்துர் ரஜ்ஜாக் ஒரு சர்ச்சை நடத்தி னார். மந்திரியின் மஜ்லிஸில் நடந்த அந்த விவாதத்தில் உமர்கய்யாம் பங்கெடுத்துக் கொண்டபோது, மார்க்க சம் பந்தமாக இவருக்கிருந்த அறிவையும் ஆற்றலையும், ஆர்வத் தையும் கண்டு பெரிய பெரிய காஜிகள் திகைத்தார்கள். உமர்கய்யாமுக்கு மத சம்பந்தமாக இருந்த அறிவுத் திற னுக்கு அல்லாமா ஷிப்லீயும் சான்று கூறி இருக்கிறார். காஜி அப்துர் ரஷீதுக்கும் ஹக்கீம் உமர்கய்யாமுக்கும் 'மெர்வ்' என்ற இடத்தில் திருக் குர்ஆன் வியாக்யானம் சம்பந்தமாக நடந்த சர்ச்சையைப்பற்றி மிகவும் பெருமை யுடன் எடுத்துரைத்திருக்கிறார்.

இவ்வளவு இருந்தும், அவரிடம் கர்வம் என்பது சிறிது மில்லை. பெரிய மகான்களின் அடக்க ஸ்தலத்துக்குச் சென்று ஜியாரத் செய்வதை தம் கடமையாகக் கொண்டிருந்தார். ஹதீது கிரந்தத்தைத் தொகுத்த இமாம் புகாரீயின் அடக்க ஸ்தலத்துக்கு, ஜியாரத் செய்ய இவர் பல தடவை சென்றிருக்கிறார்.

தற்புகழ்ச்சியையும் இவர் விரும்பவில்லையென தெரிகிறது. யாரும் இவரை யானை என்று புகழ்ந்தால், "யானையாக இருந்தும் பயனென்ன? மச்சியில் ஈ நடப்பது போல, யானையால் தலை கீழாக நடக்க முடியுமா?" என்று கேட்பார். இந்த உலகத்திற்கு யானையும் தேவை, ஈயும் தேவை என்பது இவர் கருத்து. எல்லா ஜீவராசிகளும் ஒவ்வொரு வகையில் திறன் பெற்றவைதாம்!

ஹஸன் பின் ஸப்பாஹ் என்பவர் அக்காலத்தில் இஸ்லாமிய ஞான போதகராக இருந்தார். "பாத்தினிய்யாக்கள்" என்ற பிரிவினருக்கு அவர் வழிகாட்டி. அவர் உமரின் பள்ளித் தோழர். 'உமர்கய்யாமின் ஆதரவும் உதவியும் கிடைத்தால் நான் உலகையே வென்று விடுவேன்!" என்று ஹஸன் பின் ஸப்பாஹ் பல தடவை சொல்லி இருக்கிறார். ஆனால் உமரின் போக்கு வேறு வகையில் இருந்தது— "ஆண்டவன் செய்துள்ள தவறுகளைக்காண நாம் கண்ணாடியைப் பார்க்கிறோம்! அத்துடன் கூட நிறுத்திக் கொள்ளுவதில்லை! நாமாக இருந்தால், எந்தெந்த வகையில் அபிவிருத்தி செய்திருப்போம் என்றும் கற்பனை செய்து கொள்ளுகிறோம்!" என்று சிரித்தவாறே சொல்லிக் கொள்ளுவார்! ஆதி முதல் உலகமே இந்த அறியாமையில்தானே இயங்கி வருகிறது—நாம் செய்யும் தவறுகளுக்கெல்லாம் இறைவன் பொறுப்பேற்றுக் கொள்ளுகிறான்! வெற்றிகளுக்கெல்லாம் நாம் தான் காரணம் என்று நம்மை நம்ப வைக்கவும் செய்கிறான்!

இவருக்கு அற்புதமான ஞாபக சக்தி இருந்தது. ஒரு நூலை ஓரிரண்டு தடவை படித்தால் மனப் பாடமாகி விடும். சிறந்த புத்தகத்தையும் இவர் அழகான பொருளாகவே கருதினார். வற்றாத இன்ப ஊற்றெல்லாம், இவர் கற்பனையில் அழகான பொருள்களே! இத்தகைய இன்ப ஊற்று ஒன்று இஸ்பஹான் நகரில் கிடைத்தது—அதாவது இவர் உள்ளத்தைக் கவர்ந்த ஒரு நூல்! அதை ஒரு சில தடவை படித்து மனனம் செய்து, தம் இருப்பிடம் வந்ததும் திருப்பி எழுதியும் விட்டார்!

அவர் எழுத்துக்கள் முத்துப்போல இருக்கும். அழகான சித்திரங்களையும் தம்முடைய கவிதைகளோடு சித்தரிப்பதில் இவருக்குத் தனி ஆர்வம். இவர் எழுத்துக்கள் ஒவ்வொன்றிலும் முன்னேற்றமே ஜீவனாக இருந்தது.

"சுகமாக இருக்க வேண்டுமானால், சொற்ப பணம் கொண்டு வாழ்க; அந்தப் பணத்தையும் உழைத்தே தேடுக!" என்ற கொள்கையைக் கடைப்பிடித்து, வாழ்க்கை

முழுவதும் உண்மையான இன்பத்தை அனுபவித்து, சிரித்து, ஆனந்தமாக வாழ்ந்த உமர்கய்யாமுக்கு முடிவும் சுகமாகவே வந்தது.

ஆண்டவனின் திருவடி சேர்வதற்குமுன் இப்னு ஸீனு வின் "கிதாபுஷ்ஷிபா" (பரிகார நூல்) என்ற வைத்திய நூலைப் படித்துக் கொண்டிருந்தார். பிறகு தொழுகையை முடித்துக் கொண்டு துஆக் கேட்க ஆரம்பித்தார் :

"இறைவனே! உன்னைத் தெரிந்துகொள்ள எவ்வள வோ பாடுபட்டும், ஒரு அணுவளவுதான் தெரிந்து கொண் டேன். என்னைத் தயவு செய்து மன்னித்து உன்னிடம் சேர்த் துக் கொள்!" என்று பிரார்த்தித்தவாறு மண்டியிட்டபோது, அவர் 'ரூஹ்' (உயிர்) அவரை விட்டுப் பிரிந்தது. தம் வாழ் நாள் முழுவதும், அப்பாலுக்கு அப்பால் காண ஆசைபட் டார்; இறுதியில் அப்பாலுக்கு அப்பாலே சென்றுவிட்டார்!

தம்முடைய உடல் அடக்கம் செய்ய வேண்டிய இடத் தைப் பற்றி அவர் முன்னமேயே தம் அபிப்பிராயத்தை வெளியிட்டிருக்கிருர்—அவருடைய கபுரின் மீது மலர்கள் வர்ஷித்துக் கொண்டு இருக்க வேண்டுமாம்! அவர் விரும் பிய விதமே ஹீரா கபுருஸ்தானுள் அவருக்கு இடம் கிடைத் தது. கனிமரங்கள் சூழ்ந்திருந்த அவர் அடக்க ஸ்தலம் எப்போதும் மலர் மணத்தைத் தூவிக் கொண்டே இருந்தது. இதுபற்றி நிஜாமி அரூஸி என்ற நூலாசிரியர், "சார் மகலா" என்ற தம்முடைய புத்தகத்தில் சொல்லி இருக்கிருர்.

அவர் பூத உடல் மறைந்தாலும் உலகில் அமரராகவே இன்னும் வாழ்ந்து வருகிருர். மேல் நாட்டில் இவருக்கு ஏற் பட்ட புகழும் பெருமையும் மிகச் சிலருக்கே ஏற்பட்டிருக் கிறது. ஒவ்வொரு ரூபாயியையும் தம் வாழ்க்கை லட்சிய மாகக் கருதும் தாஸர்களுண்டு. மேல்நாட்டார் மூலமாக கிழக்கு ஆசியா மக்களில் பெரும்பாலோர் இவர் கவிதைத் திறமையை அறிய ஏற்பட்டுள்ள நம்முடைய சூழ்நிலை பரிதாபத்துக்குரியது!

இவருடைய கவிதைகளைப் பல ஆங்கில மேதைகள் மொழி பெயர்த்திருக்கிருர்கள். ஃபிட்ஸ்கெரால்டு மொழி பெயர்ப்பு பிரசித்தி பெற்ற போதிலும், பிளாக்மேன், வில் பீல்டு, நிக்கல்ஸன் போன்றவர்களும் இந்தத் தொண்டு செய்திருக்கிருர்கள். இந்த மொழி பெயர்ப்புகள் கூட ஆரம் பத்தில் அவ்வளவு பிரசித்தி பெற வில்லை. ராஸெட்டி ஸ்வின்பர்ன் போன்ற கவிஞர்கள் உமர்கய்யாமின் கவிதைத் திறனை அறிந்து வியந்து பாராட்டிய பிறகுதான், அவை

கரின் பெருமை, சுத்தம் செய்யப்பட்ட வைரமணிகள் போல ஜ்வலிக்கத் தொடங்கியது.

ருபாயி என்ருல் நாலடிகளைக் கொண்ட பாடல் என்று பொருள். முதல் இரண்டடி, கடைசி அடி—இவைகளில் கடை எதுகை ஒன்றுபோல இருக்கும். மூன்ருவது அடி இந்த எதுகையோடும் இருக்கலாம்; எதுகை இல்லாமலும் இருக்கலாம்.

உமர்கய்யாமின் 'ருபா யிய்யாத்' தொகுப்பிலுள்ள பாடல்களில் பல அவருடையவையல்ல என்று பலர் சொல்லு கிருர்கள். ரஷ்யநாட்டுப் பேராசிரியர் ஷுகோவ்ஸ்கி இதை ஆதாரபூர்வமாகவும் எடுத்துரைக்கிருர். இப்னுஸீனு, ஹாபிஸ் ஸனுயி, அபூசெய்யித், ரூமி, பிர்தௌஸி, அன்வரி ஆகிய கவிஞர்களின் பாடல்களும் இதில் கலந்திருக்கின்றன வாம். முரணுன கருத்துகள் கொண்ட ருபாயி பல இருப் பதால், அவைகள் இடைச் செருகல்களாக இருக்கலாம் என்று ஒரு வகையில் நம்பவும் இடமிருக்கிறது. ஆனல், நீண்ட நாள் வாழ்ந்த அவர், வெவ்வேறு மன நிலையில், கருத்து மாறுபட்ட ருபா யிய்யாத் இயற்றி இருக்கக்கூடாதா என்று விவாதிப்பவர் களுமுண்டு.

ஆனல் ஒன்று மாத்திரம் உண்மை-முதல் வெளியீட்டில் சுமார் 160 ருபாயி இருக்க, கடைசி வெளியீட்டில் 1200 ருபாயியாக எண்ணிக்கையில் வளர்ந்து விட்டது! இந்தப் பாடல்களும் பல திறப்பட்டவைகளாக இருக்கின்றன. நீதியை வலியுறுத்தும் பாக்கள், பணிவான தன்மையை உயர்த்தும் பாக்கள், அழகை ஆராதனை செய்யும் பாக்கள், புலன் இன்பத்தைப் புகழும் பாக்கள், முன்னேற்றத்தைக் காதலிக்கும் பாக்கள் இப்படிப் பலவகையாக இருப்பதால், இந்தப் பாடல்களைக் கொண்டு உமர்கய்யாமை அறிந்து கொள்ள முயற்சிப்பது, அவ்வளவு சரியான இலக்கிய முறையாகாது. கவிஞன் மன நிலையை அவனுடைய கவிதைகள் ஒரு சில கோணங்களில் பிரதிபலிக்கலாம். ஆனல், அவனுடைய படைப்புகள்தான் அவை என்று நிச்சயமாகத் தெரிய வேண்டாமா?

சிற்சில சம்பவங்கள் உமர் எத்தகைய உயர்ந்த மனிதர் என்பதைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

ஒரு சமயம் ஒரு நண்பர் உமர்கய்யாமிடம் ஒரு வேண்டு கோள் விடுத்தார்— "நான் மிகவும் நொடித்துவிட்டேன்; மூழ்கும் நிலையில் இருக்கிறேன். தயவுசெய்து உதவு வீர்களா?"

உமர்கய்யாம் நகைத்தவாறே ஆறுதல்சொன்னார் :

"நானும் அதே நிலையில், இந்த மண்ணின்மேல்தான் நிற்கிறேன். மூழ்கிறவர்களைத் தூக்க சற்று உயரமான இடத்திலிருப்பவரால்தான் முடியும். உங்களுடைய பிரார்த்தனையை மேலே அனுப்பினால் என்ன ?"

பிரார்த்தனை, பண்பாடு, அறிவு—இவை மூன்றும்தான் உமரின் பொக்கிஷங்கள். இவைகளின் துணைக்கொண்டு, நூல்களின் வாயிலாக, உலகின்மீது அன்பு மலர்களைத் தூவி இருக்கிறார். அவைகளில் ரூபா யிய்யாத் ஒரு ரோஜாத் தோட்டம். இன்னும் சரியாகச் சொல்லப்போனால், கோடிக் கணக்கான ரோஜா மலர்களிலிருந்து எடுக்கப்பட்ட மதுர மான பன்னீர் துளிகள்! தூய்மையையும், மென்மையையும், உயரிய வாழ்வையையும் பிரதிபலிக்கும் மலர்களைக் கசக்கி சாற்றை எடுப்பது அவ்வளவு நாகரிகமானதல்ல. ஆனால் ஒவ்வொரு ரூபாயியும், கோடிக்கணக்கான மலர்களின் வாசத்தை ஒவ்வொரு பன்னீர்த் துளியாக உலகெங்கும் பரப்புகிறது. உலகம் உள்ளவரை இந்தத் தூய்மையான மணம் நிரந்தரமாக மணக்கும் !

"உலகில் உண்மையாக உழைத்து, சுவர்க்கத்தில் நிம்மதியாக இரு" என்று போதிக்கும் இந்த மகானின் வாக்குகள், பன்னீர் மணத்தைப் போல, ஜிலு ஜிலு வென்று, தென்றல் வீசும்வரை, உலகின் எல்லா மூலைகளிலும் வீசி, உலக மக்களுக்குச் சாந்தியையும் சுகத்தையும் வீசிக்கொண் டிருக்கும் என்பதில் ஐயமில்லை. அகம்பாவத்தை இவர் மனமார வெறுத்தார் என்பதை இவருடைய ரூபா யிய்யாத் களில் பல எடுத்துரைக்கின்றன.

"மனிதனே! உலகம் உனக்குச் சதம் என்றெண்ணி மமதை கொள்ளாதே! நீ மண்ணுவதற்கு முன் இந்த மண்ணை மதிப்பாயாக!" என்ற கருத்தைப் பின்னணியில் கொண்ட ரூபாயி ஒன்று வருமாறு :

"பேஷ் அஜ் மனேதோ லைலொ
நஹாரே பூநஸ்த்
கர்தந்தா பலக் பராயே
காரே பூதஸ்த்
ஜின்ஹார் பகாக் கதம்
ஆஹஸ்தா நஹீ
கா(ன்) மர்துயக் சஷம்
நிகாரே பூதஸ்த்"

# பன்னீர் மணம்

## காட்சி 1

[உமர்கய்யாம் பன்னீர் மணத்தை நுகர ஒரு ரோஜாத் தோட்டத்தில் நுழைகிருர். மலர்ந்த முகத்துடன் சிரித்து நின்ற மலர்கள் கவியை உள்ளார்வத்துடன் வரவேற்கின்றன. அவைகளின் பூரிப்பில் தானும் களித்து நின்ற அவர், அடுத்த கணம், தன்னைப் பற்றியும், மலர்களின் வாழ்வு பற்றியும் சிந்திக்கிருர்— '' இன்று மலர்ந்து விளையாடும் இந்தப் பூக்கள், நாளை ?'' —குழந்தை குணம் படைத்த உமர்கய்யாமின் முகம், மலர்களுக்குமுன்பே உலர்ந்து விடுகிறது—''மலர்களின் இன்றைய புகழ், நாளை எங்கு போகிறது ?''—தனக்குத் தானே பேசுகிருர்]

**உமர்கய்யாம் :** *ஹும் ! புகழ் !......யாருக்கு வேண்டும் ?... ரோஜா மலரைப் போலவாவது, இந்த உமர்கய்யாமின் வாழ்க்கை உபயோகமுள்ளதாக, துல்லியமாக, உற்சாகமாக அமையுமானல், வாழ்வின் காலத்தைப் பற்றி யாருக்குக் கவலை ?......இந்தப் பேறு கிடைத்தால், வாழ்வு எங்கு தொடங்கி எங்கு முடிந்தால்தான் என்ன ?*

[நடனவல்லி மெஹ்ருனின் தோழிகள் மும்தாஜ், ஷௌபின் இருவரும் திடீரென்று வருகின்றனர்]

**மும்தாஜ் :** *(குறுக்கிட்டு) ஹஸ்ரத் !......எங்கள் அன்புக் காணிக்கையாக, நாங்களும் ரோஜா மலர்கள்தான் கொண்டு வந்துளளோம்.*

**உமர் :** *(ஆச்சர்யத்துடன்) காணிக்கையா ? எனக்கா ? காணிக்கை பெற அல்லாவைத் தவிர வேறு யாருக்குத் தகுதி உண்டு ?*

**ஷௌ :** *தங்கள் மேல் கொண்டுள்ள அன்பின் மிகுதியால், தங்களைக் கண்டு போக வந்தோம. வெறுங் கையோடு வரலாமா ?*

**உமர் :** *குயவன வீட்டுப் பானைகளில் ஒன்று மற்றொன்றைக் கண்டு போவதா ? (சிரித்து) வேடிக்கையாக இருக் கிறது !......தாஙகள் யாரோ ?*

**மும்தாஜ் :** *நாங்களும நைஷாப்பூரைச் சேர்ந்தவர்கள்தான். எங்கள நாட்டியராணி மெஹருனுடன போய்க்கொண் டிருந்தோம......*

**உமர் :** *சற்று இளைப்பாறிப போக வேண்டுமா ?...பக்கத் தி லுள்ள பசுநதிடலில் இளைப்பாறலாமே ?*

**ஷௌ :** *அதற்கு அவசியமில்லை ! எஙகள மெஹருன் னிஸா ஸாஹிபா பெரிய பணககாரி...வேண்டிய வசதிகள செயது கொடுசக அநேக ஆட்களிருக் கிறார்கள.*

**[உமர்கய்யாம் இதைக் கேட்டு, தனக்குத்தானே புன்முறுவல் செய்கிறார். அவருடைய அருமைத் தோழனை ஆடு அவரைப் புரிந்துகொண்டதுபோல நிமிர்ந்து பார்க்கிறது]**

**ஷௌ :** *(சிரித்து) என்ன, மௌனமாக ஆட்டைப் பார்த்துக் கொண்டிருககிறீர்கள ?*

**உமர் :** *என்னைத் தேடி வந்த காரணம புரியவில்லையே ! (சிரித்து) ஏன பாய் அஸ்கலப் ! (ஆடு கத்துகிறது)*

மானிடர்களின் இத்தகைய போக்கு உனக்கு விசித்திர மாகப் படவில்லை?......

[ஆடு கத்துகிறது]

ஷௌ: என்ன? தாங்கள் ஆட்டுடன் பேசுகிறீர்கள்? இந்த மிருகத்துக்குச் சிந்தனா சக்தி உண்டா?

உமர்: ஏன, விலங்குகள் சிந்திப்பதில்லை என்பதா தங்கள் கருத்து? இல்லை......அவைகள் சிந்திக்கின்றன...... நன்ருகச் சிந்திக்கின்றன—மனித ஜாதியைப் போல, முன்னுக்குப்பின் முரண் இல்லாமல் சிந்திக்கின்றன!

மும்தாஜ்: இத்தகைய கருத்துக்களை விளக்கும் தங்கள் பாடல்களில் எங்கள் மெஹ்ருனுக்கு எல்லை கடந்த ஆர்வம்!

உமர்: என் பாடல்களில் கருத்துக்களா? சர்வ சாதாரண மான பூவின் கதையைக் கூட என்னுல் விளக்க இயல வில்லையே......ஒவ்வொரு அதிகாலையிலும் கணக்கற்ற புஷ்பங்கள் மலர்கின்றன; ஆனுல், முதல் நாள் மலரும் மலர்கள் எங்கு போய்விடுகின்றன என்று தெரியாமல் அந்தப் புஷ்பங்களையே கேட்கின்றேனே, அந்தப் பாடல்களிலா உங்கள் தோழிக்கு மயக்கம்?

மும்தாஜ்: விடையற்ற இத் தத்துவங்களை, தங்கள் வாய் மூலமே கேட்க வேண்டுமென்று எங்கள் மெஹருன் விரும்புகிருர்!

ஷௌ: உங்களுக்கு இனி குடிசை வாழ்வில்லை! நைஷாப்பூர் நகரின் அலங்கார வீதியில் அமைந்துள்ள எங்கள் அரண்மனைக்குத் தங்களை அழைத்துப் போகவே வந்துள்ளோம்.

உமர்: எது அரண்மனை? எது குடிசில்? எல்லாம் களிமண்தானே? ஏன், நாமும் அந்த மண்தானே?

ஷௌ: (மெதுவாக நகைத்து) எங்கள் மெஹ்ருனின் எழிலைக் கண்டால்......களிமண்ணைக் கொண்டு

இத்தகைய வசீகரத்தைச் சிருஷ்டிக்க முடியாது என்பதைத் தாங்களே ஒப்புக்கொள்வீர்கள்.

**உமர்:** எது எழில்? வீதி பெருக்கிடும் தோட்டியின் கையில் வீற்றிருப்பது எழிலா? இல்லை, சோதி பெருக்கி மேதினி இருள் துடைக்கும் ஆதவனின் சக்தி எழிலா? ......எது எழில்?

**மும்தாஜ்:** தங்கள் கவிதைகள்தான் எத்தகைய எழில் சித்திரங்கள்! தங்கள் கவிதைகளில் எது இல்லை?

**ஷௌ:** தென்றலில் உள்ள குளுமை, தேனில் உள்ள இனிமை, மின்னலில் உள்ள உணர்ச்சி, குழந்தை மழலை இன்பம், குளிரும் மதியின் மயக்கம், அழலின் தூய்மைத்தன்மை—எதுதான் இல்லை?

**மும்தாஜ்:** எங்கள் மெஹ்ரா ஸாஹிபாவைக் கண்டால், தங்கள் கவிதையின் எழில் ஜீவன் பெற்று நாட்டிய மாடுவது போல உணர்வீர்கள்.

**உமர்:** தூயசௌந்தர்யத்துக்கும் ஏன் மாசு கற்பிக்கிறீர்கள்?

**ஷௌ:** எது மாசு? எங்கள் ஸாஹிபாவா மாசுள்ளவர்?... தயவுசெய்து தங்கள் வார்த்தையை வாபஸ் வாங்கிக் கொள்ளுங்கள்......சந்திரிகையைப் உருக்கி, தாளப் பொடிதூவி, தகதகத்த செக்கர் நிழலைக் கூட்டி, சிந்தனைகளை நெய்து, நட்சத்திர வண்டினங்கள் பாட, தென்றலில் அவர்கள் மிதந்து வருவதை நீங்கள் கண்டால்......(பெருமையுடன் நகைத்து) உலகமே அவருடைய வசீகரப் போதையின் முன்பு மண்டியிட்டுக் கிடக்கின்றதே!

**உமர்:** வெறும் மானிட தோற்றத்தையா எழில் என்கிறீர்கள்? வாழ்க்கை முழுவதும் இந்த அழகை, புதுக் கருக்கு மாறாமல், அழியாமல் வைத்திருக்க முடியுமா? வரம்பைக் கடந்து ஆத்மாவுக்குள் ஊடுருவி நிற்கும் அழகை அன்றோ நாம் விரும்ப வேண்டும்?

மும்தாஜ் : அப்படியென்றால் தாங்கள் வரவில்லையா ?

உமர் : இயற்கையின் இனிய வனப்புப் பூத்துக் குலுங்கிப், பச்சைப் பசேலென்று விளங்கும் இந்த இடத்தை விட்டா வரச்சொல்லுகிறீர்கள்? மணித்திராக்ஷை இளங் கொடித் தேன பசுந்தளிரின நட்பை விட்டு இந்த உமர்கயாம போகத் துணிவானா ? பாய் அஸ்கல்ப் ! நீயே சொல் இவர்களிடம் !

[ஆடு கத்துகிறது]

ஷௌ : தாங்கள் இயற்கையின சௌந்தர்யத்தைப் பார்க் காமல் இப்படிச சொல்லுவது சரியல்ல...... தாங்கள் வருவதால் தஙகளுககும பயனுண்டு !

உமர் : எனக்குப் பயனா ? தேவை என்று நான் அறியேனே!

ஷௌ : (பெருமையுடன) இந்த எளிமையில் சிக்குண்டு வறுமையில் உழலாமல், அவர்கள கண்களின விண் விளைவு கலநத கவர்சசியிலே கட்டுண்டு ராஜ உபசாரத்தோடு வாழலாம !

உமர் : அறியாப் பெண்ணே......எது ராஜ உபசாரம் ? ராஜ உபசாரம என்று நீங்கள் சொல்லுகிறீர்களே...... அதுமட்டும நித்தியமா ? இனப ரோஜா மலர்களுடன் இலாம ஒழிந்து போனான. ஏழு வளையங்கள்கொண்ட அருங் கோப்பையை அன்புடன வைத்திருந்தானே ஜாமஷெட்...அது என்ன ஆயிற்று ? உமர்கய்யா முக்கு அற்ப சுகத்தைவிட ஆத்ம கௌரவமே பெரிது. ...பெண்களே ! நீங்கள் போய் உங்கள் மெஹ்ருனிடம் சொல்லுங்கள்; பாட்டுப் பாடி பிச்சை வாங்குபவனல்ல உமர் !...ம்...பாய் அஸ்கல்ப்!...நீ நட அப்பா...அந்த மைனாவும்...புல்புலும்...காத்திருக்கும் !

[ஆடு கத்துகிறது; அதை அழைத்துக் கொண்டு உமர் போகிறார்]

## காட்சி 2

[ஆடம்பர அதிகாரி கியாஸ் பேக்குக்கு, வெறும் உணவுக்காக உடலை வளர்க்கும் அவன் தோழர்கள் தொப்பி அணிவித்துக் கொண்டிருக்கிறார்கள்]

**கியாஸ் :** *அமீர்ஜான்···என் கணைக்கு முன்னால்?······*

**அமீர் :** *மூச்சு விட முடியுமா?*

**குலாம் :** *ஆனால் கனனியின் புன்னகையின் முன் வீழ்ந்து விடுகிறீர்கள்!*

**கியாஸ் :** *(பெருமையுடன்) என் பெருமை அதில்தானே அடங்கியுள்ளது! ஆனாலும், அந்த இரு கண்கள்தான என் இதயத்தை என்ன பாடுபடுத்தி விடுகின்றன !*

**அமீர் :** *அவை கிடைத்தால் எத்தனை இன்பம!*

**குலாம் :** *கிடைக்காவிட்டால் எத்தனை இன்னல்!*

**கியாஸ் :** *இன்னலைப் பற்றி இப்போது பேச்சு ஏன்? நமக்கு வேண்டியது இனிமை···இனிய சங்கீதம்···சரசாங்கிகளை மீட்டும சாரங்கியில் தேவையில்லை···சலங்கை ஒலியில் கேட்போம்!*

**அமீர் :** *மெஹருன் நடனமாட வேண்டுமானால், உமர்கய்·· யாமை அவசியம அழைக்க வேண்டுமென விரும்பு கிறார்களே?*

**கியாஸ் :** *தன் ஆட்டிடம் வேதாந்தம் பேசும் அந்த உமர் தானே? வரட்டுமே!···அழைக்க ஆள் போயவிட்டான அல்லவா ?*

**அமீர் :** *அப்பொழுதே அனுப்பிவிட்டேன்······ இதுவரை அவரும் வந்திருக்கலாம்.*

**கியாஸ் :** *அமீர்ஜான்!···இதை நன்றாக ஞாபகத்தில் வைத் துக்கொள். என் மெஹ்ருனின் சொல்லே சட்டம்; ······அவள் புன்சிரிப்பே பரிசு···*

**குலாம் :** அழகியின் சொல் சட்டமா? சட்டத்துக்கு வளைவுகள் பல இருக்க வேண்டுமே!

**கியாஸ் :** முட்டாள்!...ரஸிகத்தன்மையை இவன் என்ன அறிவான்......அமீர்......எனக்கொரு சந்தேகம்...... மனிதன முட்டாளதனத்தை எந்த வயதில் விடுகிறன்?

**அமீர் :** இந்த எளியவனுக்கு அதெல்லாம எப்படித் தெரியும்?

**குலாம் :** தெரியாதுதான்! முட்டாளுக்கு வயதே இல்லை... அது வளர்வதே இல்லை!

**கியாஸ் :** என்னைப்போல என்றும இளமையா?...சபாஷ்!... ஏன் இன்னும் மெஹ்ருன் வரவில்லை? என் உள்ளத்தில் பதிந்த அவள் உருவம்!......சுருண்டு வளைந்த கேசம! படர்ந்து மேயும் கண்கள்!... அந்த ஓரப் பார்வையின ஜ்வலிப்பு—விண் மீன்களுக்கும உண்டா என்ன? அவளுடைய பேச்சும் சிரிப்பும......

**அமீர் :** குளிர்ந்த பேச்சு......

**குலாம் :** சங்கீதச் சிரிப்பு

[மெஹ்ருனின் சிரிப்பு தூரத்தில் கேட்கிறது; அதைத் தொடர்ந்து சலங்கை ஒலி]

**அமீர் :** அதோ வந்து விட்டார்களே......

**கியாஸ் :** யார்? என் மெஹ்ருனு...? என் மோகனங்கியின் மெல்லிய பாதம படும் இடம் சுகந்தம் வீசுமே!...

[மெஹ்ருன்னிஸா புன்முறுவலுடன் வருகிருள்]

**கியாஸ் :** மெஹ்ருன்! உன் வாக்குப்படி நீ நடனமாட வந்ததற்கு நான் மிகவும் கடமைப் பட்டிருக்கிறேன்.

**மெஹ் :** உமர்கய்யாம வந்து விட்டாரா?

**கியாஸ் :** இந்நேரம் வந்திருக்கலாம்.

**மெஹ் :** பின், அவர் இருக்குமிடம் போகலாமே!

**கியாஸ் :** *உனக்காகத்தானே காத்திருக்கிறேன்...வா... நடனசாலைக்குப் போகலாம்.*

[எல்லாரும் நடனசாலைக்குப் போகிறார்கள்; அங்கே உமர் சாந்தமாக உட்கார்ந்திருக்கிறார். அவரை நேருக்கு நேர் கண்ட மெஹ்ருன்னிஸா அவர் தேஜஸ் முன் மயங்கி விடுகிறாள். ஆனால், அவர் தன்னை அவமானப்படுத்தியது, ரோஜா முள்போல அவள் ஹிருதயத்தில் குத்துகிறது. தன் சாகஸத்தின் முன் விழாதவர் யார் என்ற கர்வத்துடன், உமர்கய்யாம் இயற்றிய காதல் பாடலொன்றைப் பாடி, பிரமாதமாக நடனமாடுகிறாள். அவள் உள்ளத்திலிருந்த ஆர்வமெல்லாம் நடனத்தின் ஒவ்வொரு முத்திரையிலும் நிழலாட, நடனம் முடிகிறது].

**கியாஸ் :** *மெஹ்ருன்! மிகவும் பிரமாதமாக நடனமாடிவிட்டாய்!... சொகுசுத்தனத்தால் சித்திர சித்திரவதை செய்ய இயலும் என்பதைத் தெளிவாகக் காட்டிவிட்டாய், சொற சித்திரமாக நின்று!...*

**குலாம் :** (*மெதுவாக*) *பொய்க் கொம்போ, பொலிவின் வடிவோ...பூங்கொடியோ என்று அதிசயிக்க......*

**கியாஸ் :** *முட்டாள்! பேசாமலிரு... மெஹ்ருன் ! நீ எங்கிருந்தோ, எப்படியோ வந்து, என் மனதை கொள்ளைகொண்டாய். படித்த பாடங்கள் அத்தனையும் மறந்துவிட்டேன்... ஆனால்...*

**மெஹ் :** (*சிரித்து*) *என் ஞாபகமும் மறந்து போகும்...*

**கியாஸ் :** *இல்லை, அப்படிச் சொல்லாதே!... உன் நிலவு முகம்...கொஞ்சும் பார்வை, மதுரப் பேச்சு, உல்லாச நடை-இவை எனக்கு என்ன கற்பித்தனவோ, அவற்றில் ஒன்றையும் மறக்க இயலவில்லையே!...*

**அமீர் :** *கற்கோட்டையில் செதுக்கப்பட்ட சித்திரத்தை வேண்டுமானாலும் சிதைத்துவிடலாம்......*

கியாஸ்: உண்மை!...சிந்தையில் பதிந்த ஓவியத்தைக் களைந்தெறிய இயலுமா? சௌந்தர்ய ராணி நீ!...... கொடி போல் துவண்டு... பாவம் பிடித்து நிற்கும் போது...

மெஹ்ர்: ஹூஸூர்... என் நாட்டியம் சிறப்புடன் அமைந்திருந்ததென்றால், அதற்கு முக்கிய காரணம் பொருள் சுவையுடன் குலுங்கும் அந்தப் பாடல்தான் இந்தப் பாடலின் ஆதிகர்த்தா உமர்கய்யாம் ஒன்றும் சொல்லவில்லையே...

உமர்: என் ஆறு அஸகல்புக்கு, என் அரிய நண்பனுக்கு நடனம் காட்ட விரும்பினேன். உன் நடனம் பார்க்கவும் சந்தர்ப்பம் கிடைத்தது. சிறப்பாகவே நடனமாடினாய்!...ஆனால், வாழ்க்கையின் லட்சியத்தை நாட்டியமாகக் கொள்ள முடியுமா?

மெஹ: ஏன், நாட்டியம் அருங்கலைகளில் ஒன்றல்லவா?

உமர்: கலை!...உலகில் எடுத்ததெல்லாம் கலைதானா? நீ எவ்வளவுதான் நாட்டியமாடு, மயிலின் அந்த ஒய்யாரம், பெருமிதம், கம்பீரம்—ஏதும் உன் நடனத்தில் இருக்க முடியுமா?

கியாஸ்: (சற்று அதிகாரத்துடன்) தங்கள் வேதாந்தம் தங்கள் குடிசையிலேயே இருக்கலாம்; இங்கு அது விற்பனையாகாது!

உமர்: அதுதான் நான் சொல்லுகிறேன்...இயற்கையைப் பற்றி மனிதன் கொண்ட கற்பனை தானே கலை! அது நகரத்திலில்லை...வெறும் ஆடம்பரத்தில் மிளிராது.

கியாஸ்: (அதட்டியவாறு) போதும்... இனி நான் கேட்க விரும்பவில்லை. (கனிவுடன்) மெஹ்ருன்! இன்றைய ஒப்பற்ற நாட்டியத்துக்குப் பரிசாக இந்த முத்து மாலையைப் பெற்றுக் கொள்ளுவாயா?

**மெஹ்ற் :** ஹாஸிர்...மன்னிக்க வேண்டும்...என்னிடம் பல முத்து மாலைகள் உள்ளன.

**குலாம் :** மனம் உருகி, உள்ளம் உருகி அளிக்கும் பரிசை மறுப்பது சரியல்ல என மெஹ்ருன் !

**மெஹ்ற் :** ஷௌபினா !...அந்த முத்துமாலையை வாங்கிவை...

**உமர் :** மெஹ்ருன் !...வாழ்க்கையை இப்படியே கழித்து விட்டால் பிறகு ஏங்கி நிற்பாய்...தோராத வாழ்வின் பறவை இனியும் செல்லும் தூரம் சிறிதேதான...ம்... இதோ···இந்த தஸ்பீஹ்மாலை.. ஆண்டவனை நினைக்க உதவும்...

**மெஹ்ற் :** தங்களிடமிருந்து பெறுவதே என பாக்கியம். (கண்களில் ஒற்றிக்கொள்கிருள்)

**அமீர் :** (மெதுவாக) ஹாஸிர் ! பார்த்தீர்களா ?...இவன் தந்த மாலையைத் தன கணகளில் ஒற்றிக் கொள்ளுகிருள்.

**நியாஸ் :** இப்லீஸ் !...இந்தப் பரதேசியை இங்கு வரச் செய்ததே என தவறு......

[அவரை மதிக்காமல் உமர் தன் ஆட்டுடன் அப்பால் போகிருர்]

## காட்சி 3

[உமர்கய்யாம் ரோஜா புஷ்பத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிருர். குற்றமில்லாத சிரிப்போடு குவலயத்தில் பிறந்த அந்த மலர் பட்டினல் மௌனமாக மூடப் பட்டு இருந்தும், மணத்தை உலகில் கொட்டிச் சிரிப்பதை அவரால் வியக்காமல் இருக்க இயலவில்லை. தன் ஹிருதயத்தைக் காட்ட அது மெதுவாகமலருவதை ஆனந்த மலர் நடனமாக அவர் உணர்கிருர்]

**உமர் :** ஆஹா ! சுற்றி நடம்புரியும் இந்தச் சுடர் ரோஜா வின் நடனம்தான் என்னஆனந்தமாக இருக்கிறது!...

[மெஹ்ருன் புன்முறுவலுடன் வருகிருள்]

**மெஹ் :** (சிரித்தவாறு) இந்தத் தெய்வீக நடனத்தை எல்லாம கண்டு உண்மையான ஆனந்தம கொள்வ தால்தான, என்னுடைய அர்த்தமற்ற ஆட்டம் தங்களைக் கவரவில்லை போலும!

**உமர் :** யாரது ?

**மெஹ் :** தங்கள் மெஹ்ருன்! மலர்களைவிட அதிகச் சுகந்தம வீசும் கவிதைகளியற்றும தங்களைத் தேடி வந்தேன.

**உமர் :** மெஹ்ருன் !...நீ சொல்வது சரியல்ல ! மலர்களை விடத் தூய பொருளகளா உலகில்?...மோனத்தொண் டிலே கழியும அழகும் மணமும உடைய வண்ண வண்ண மலர்கள, குறுகிய வாழவானுலும, எத்தகைய ஆனந்தமான வாழ்வை வெளியிடுகின்றன ! மலர்க் கூட்டத்தின் மஞேகரமான காட்சியைக் காணும்போது, ஆண்டவன அருகில் இருப்பது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படுகிறது.

**மெஹ் :** தங்களுக்கு மலர்கள மேல் உள்ள ஆசையை அறிந்தே, இந்த மகிழ மாலையை என் அன்பின சின்ன மாகக் கொண்டு வந்துளளேன.

**உமர் :** அன்றும ஒரு சிறு மகிழமாலை அளித்தாய் (சிரித்து) பூர்சரத்தைக் கொடுக்கிருயே, உறவுகூட வாசனையைப் போல்தான் என்று எடுத்துக்காட்டவா ?

**மெஹ் :** அந்தப் பாக்கியம, எனக்குக் கிட்டுமானல்...

**உமர் :** எனக்கு மகிழம் பூக்கள என்றல் மிகவும் பிடிக்கும். ஆடம்பரமற்றவை ; விளமபரமில்லை ; ஆனல் எத் தகைய வாசனை ?

**மெஹ் :** (சிரித்து) இந்த மணமும் பிரிய மறுக்கிறதல்லவா?

[மெஹ்ருன் அவரை உற்றுப்பார்க்கிருள்]

**உமர் :** என்ன மெஹ்ருன் அப்படிப் பார்க்கிருய் ?

மெஹ்: என் மனதில் பொங்கும் ஆசையைப் பார்வை மூலம் வடிக்க முயலுகிறேன்.

உமர்: ஏனோ?

மெஹ்: மழை இளைப்பாற குட்டையுண்டு, மனம் இளைப்பாற எண்ணமுண்டு கழல் இளைப்பாற நீருமுண்டு, ஆனல் என் ஆசை இளைப்பாற... தங்கள் இதயமுண்டா?

உமர்: (சிரிப்புடன்) பேதையே! நருகு இளைப்பாற மருந்திருக்கலாம், கதிர் இளைப்பாற இரவுமுண்டு, ஆனல் கவலை இளைப்பாற உலகில் ஏது இடம்?

மெஹ்: ஏனில்லை? ..என் கவலை தீர, தங்கள் அன்பு இல்லையா? தங்கள் கண்ணுக்கு நான் காட்சியாகத் தோன்றவில்லையா?...... தங்கள் கவிதைக்கு நான் கற்பனையாக முடியாதா?...

உமர்: விண்ணுக்கும் சுடருக்கும் காதல் இருக்கலாம். ஆனல் விளக்கிடம் விட்டிலுக்கு காதலா?

மெஹ்: தாங்கள் வேண்டுமென்றே அவ்வாறு சொல்கிறீர்கள். ஆனல் தங்கள் பார்வை?...

உமர்: (சிரித்து) என் பார்வையா?...பார்க்கக்கூடாதா?

[உமர் கபடமற்றுப் பார்க்கிருர்]

மெஹ்: (சிரித்து) தயவு செய்து அப்படிப் பார்க்காதீர்கள்.

உமர்: என்ன?

மெஹ்: (சிரித்து...) என்ன மீண்டும அப்படிப் பார்க்கிறீர்கள்?... இந்த மாதிரி திருஷ்டிக்குத் தன் பருவத்தை வழங்கித்தான் பெண் சீக்கிரம் முதுமை அடைந்து விடுகிருள்! (சிரிக்கிருள்)

உமர்: பெண்ணே! நீ சிரிக்கிருய்...உடன் உன் விதியும் சிரிப்பது உனக்குத் தெரியவில்லை!

மெஹ்: என் விதியைத்தான், உங்களிடம் ஒப்படைத்து விட்டு...அதை மெருகிட்டுப் பெற கையேந்தி நிற்கிறேனே...தங்கள் அநுதாபம் கிடைக்குமானல்...

**உமர் :** பாவ அஸகல்ப்! (ஆடு கத்துகிறது) இந்த ஏழையிடம அனுதாபம! பார்த்துக கொண்டாயா?...... மெஹ்ருனா, நீ விளையாட்டாகச் சொல்லுகிறாய். நீ அறியவில்லை. பிரமசாரியாகவும கனனி யாகவும வாழ்பவர்களைத்தான உலகம சந்தேகக் கண்கொண்டு பார்க்கிறது. கலியாணமானவர்கள எவ்வளவு தப்பு பண்ணினாலும ஒழுங்கானவர்கள் போலவே தோன்றுகிறார்கள.

**மெஹ்ர் :** எனக்கு அதெல்லாம அவசியமில்லை. தங்கள பாசத்தால் கட்டுண்டு தாங்களே என் ஜீவன் என்று அலைந்து திரிகிறேனே, அது தங்களுக்குத் தெரியவில்லையா?

**உமர் :** அதைத் திருத்த வேண்டுமெனபதுதானே என நோக்கம.

**மெஹ்ர் :** ஹூம!...நான மத்தையை அநாபாவியாக இருந்தேன. என வசீகரத்தால எத்தனை பேர்களின மனோ திடத்தைச் சிதற அடித்தேன். ஆனால், என்னுடைய அன்றைய அகங்காரத்தின ஆர்ப்பரிப்பு எங்கே?... இன்றைய என அழகின பதைப்பு எஙகே?... ஹூம்!... என் புகழ எனனை எங்கே கொண்டு போய் விட்டிருக்கிறது!...

**உமர் :** அறியாமையின விளைவாக உண்மையை உணராத செயல்கள இப்படி மலிந்திருப்பதாலதானே, உலகம சோபையை இழந்துவருகிறது.

**மெஹ்ர் :** நல்லொழுக்கம எல்லாம நிறைந்த தங்களிடம இந்த ஏழைக்கு மட்டும கருணை இல்லையா?

**உமர் :** நல்லொழுக்கம! ஆம ....... பணக்காரர்களுக்கு வேண்டுமானால் அது சிறப்பியல்பாக இருக்கலாம்; ஏழையிடம் அது அவசியம இருக்க வேண்டிய தாயிற்றே! தொழிலாளியின நுதலில் உதிர்க்கும்

வியர்வைத் துளிதானே, முதலாளியின் அணியில் வைரமாக ஜவலிக்கிறது!

**மெஹ் :** ஏழையைப் பற்றிய தங்களுடைய இந்தக் கருத்தை உலகம் உள்ளளவும் மறக்க முடியுமா?

**உமர் :** நானே ஏழையிலும் ஏழைதானே?

**மெஹ் :** யார் உங்களை ஏழை என்றது? தங்கள் கவிதைகளை விலையாக்க முடியுமா? எவ்வளவு செல்வத்தைக் குவித்தாலும் அவைகளை மதிப்பிட முடியுமா?

**உமர் :** தூய இன்பத்தை நாடும் முயற்சிக்கு எல்லை, செல்வந்தானு? இல்லை, அதன் எல்லை, தூய இன்பமே இன்பத்தில் ஏற்படும் திருப்தி!

**மெஹ் :** தங்களுக்கு மட்டும் ஆத்ம திருப்தி ஏற்பட்டால் போதுமா? நான் சம்மதிக்க மாட்டேன்......ஈரானின் ஒப்பற்ற கவிஞர் இருளில இருக்கலாகாது...அவர் புகழ் உலகின் எல்லா மூலை முடுக்குகளிலும் பரவ வேண்டும்....நான் உங்கள் கவிதைகளின் ஜீவனைக் கடைமாடுவேன். உங்கள் கவிதையின் ஒப்பற்ற தன்மையை எட்டுத் திக்குகளிலும் பரப்புவேன்.

**உமர் :** (சிரித்து) கல், தன்னிடத்திலேயே கனமாக இருக்கிறது!

**மெஹ் :** இது எத்தகைய கல்?—இதில் தெரியும் ஒளி வர்ணங்கள் கோடி கோடி! அதன் பிரகாசம் கற்பனையைக் கடந்தது - அதன் விலை, எல்லைக்கு அப்பாற்பட்டது - அது மறைந்து நின்று ஜவலிப்பதால், உலகுக்கு என்ன பயன்? உண்மையான விலையை உலகம் அறிந்து கொள்ள வேண்டாமா?

**உமர் :** விலை!......சதா விலை விலை என்கிறாயே?......இந்த உலகில் பொருள் யாருக்கு வேண்டும்? ஏழையின் குடிசையிலிருந்து வருகிறதே புகை-அடுப்பிலிருந்தல்ல, நெஞ்சத்திலிருந்து—அந்தப் புகையை அழிக்க, ஈரா

னின செல்வந்தர்களின் பொருள் முன் வரவில்லையே, அந்தப் பொருளின் அவசியம் என்ன ?

மெஹ் : அதுதான் நானும் சொல்லுகிறேன்...ஈரானுக்கு மாத்திரமல்ல - இந்த உலகத்துக்கே உங்களுடைய இத்தகைய கவிதைகள் அவசியமானவை...இவை கேவலம் ஒரு ஆடு மாத்திரம் கேட்கவல்ல. "கீழ்த் திசையில் தன கவிதை நல்லொளி எல்லாம், உமர்கய் யாம் என்னும் தெய்வீகக் கவி படைத்தார்" என்ற தஙகளுக்குரிய கௌரவம நம் ஈரானுக்குக் கிடைக்க வேண்டும்.

உமர் : (இளக்காரமாக நகைத்து) இவ்வளவும் உன் நாட்டியத்தால் அளிக்கவேண்டுமென்று நீ திட்டமிட்டிருக்கிருய்!......

மெஹ் : என் நாட்டியம அதற்கு ஒரு தூண்டுகோல்... அவ்வளவுதானே!...பொஙகும சுடர் பரிதியை ஒத்த புது உலகத்தைப் படைப்பது நீங்களல்லவா ?

உமர் : மெஹ்ருன ! நீ விடாமல் பேசுவதில் பயனில்லை. உலகை நினைத்து உளம நடுங்கும ஊமை மனிதன் நானல்ல...போ ! ஒரு நாட்டியக்காரியால் என் கவிதைகள் பெருமை அடைவதற்கு நான் சற்றும் ரமமதியேன...அது அவசியம் இல்லை.

மெஹ் : (கோபமாக) யார் நாட்டியக்காரி?...(கலங்கி) நான் வெறும் நாட்டியக்காரி மட்டுமதானு ? நான் உகுக்கும் கண்ணீர் கூட உங்கள இதயத்தைக் கரைக்காதா ?

உமர் : பெண்ணே, நாம அழுவதற்குப் பிறக்கவில்லை, உலகின் போககைக் கண்டு சிரிககவே பிறந்தோம்.

மெஹ் : நீங்கள் சிரிப்பீர்கள், என் துல்லிய அன்பை, நான் என்னை அறியாமல் உங்கள் மேற்படரவிட்டு......

உமர் : நானும் பிரேமையில் கட்டுண்டுதான் கிடக்கிறேன்.

**மெஹ் :** ஆனால், தங்கள் அன்புக்கு என் பிரேமை பாத்திரமானதல்லவா?

**உமர் :** என்றும் அழியாத இயற்கையின் வனப்பை ஆண்டவன் படைத்திருக்கும்போது, உன் மையலின் முன் உமர் மயங்குவான் என்று நீ எண்ணுவது பெண்ணுக்கு உரித்தான பேதமையால்தான்... என் ஆண்டவனிடம் என்னுடைய மனோ வாக்குக் காயத்தை அன்றே ஒப்படைத்து அவனைத் தேடி அலைகிறேன்.. நீயும் உலகின் அற்ப சுகங்களை மறந்து சன்மார்க்கத்தைப் பின்பற்றினால் மன நிம்மதி பெறலாமே! உலகின் கோடியில் கதவு தெரிகிறது; ஆனால் திறவுகோல் தெரியவில்லை. இதை அறியாமல் நீ உழலாதே...ம்... மெஹ்ருன்! நீ போகலாம்.

[அதைக் கேட்டு மெஹ்ருன்னிஸா ஆச்சர்யத்தால் மெய்ம்மறந்து நிற்க, உமர் தம்முடைய ஆட்டை இழுத்துக்கொண்டு போய்விடுகிறார். இந்த அலட்சியத்தைக் கண்டு வெகுண்ட மெஹர், மிகவும் ஆங்காரத்துடன் தன் இருப்பிடம் தேடிப் போகிறாள்]

## காட்சி 4

[இரவின் முன்னேரம்—மெஹ்ருனின் கோபம் இன்னும் தணியவில்லை. ஒரு நெருப்புக்கணப்பின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தவள், எழுந்து அங்குமிங்கும் ஹாலில் நடக்கிறாள்.]

**மெஹ் :** (கோபமாக) "மெஹ்ருன் நீ போகலாம்!".. என்னை அனுப்ப இவர் யார்? யாரங்கே? ஜரீனா?

**ஜரீனா :** பக்கத்திலேயே இருக்கிறேனே......

**மெஹ் :** அவர் இங்கு வரத்தான் வேண்டும். புரிகிறதா?

**ஜரீனா :** யாரைச் சொல்லுகிறீர்கள்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே...

**மெஹ்ற் :** உனக்கு மாத்திரமா? அவருக்கே ஒன்றும் புரிய வில்லையே (கோபமாக நகைத்து) ஹூம்! இந்த மெஹ்ருனைப் புரிந்து கொள்ளவில்லையா? புரிந்துகொள்ளச் செய்கிறேன்...ஜரீனு, நீ என் தாய்...

**ஜரீனு :** தாய்!......எப்படி?......ஏன்?

**மெஹ்ற் :** எதிர் கேள்வியே கேட்கக்கூடாது! இதோ இவைகளின் உதவி கொண்டு நீ கிழவி போல மாறவேண்டும். அது மட்டுமல்ல, நோய் உள்ளவள் போலும் நடிக்க வேண்டும்...உமர்கய்யாமை வரவழைக்கிறேன், உனக்கு வைத்தியம் செய்ய வேண்டுமென்று! நான் சைகை காட்டியதும் நீ போய்விடலாம்.

**ஜரீனு :** சரி......

**மெஹ்ற் :** சரி என்று சொல்லிக்கொண்டு நிற்காதே! போய் கிழவிபோல வேஷமணிந்துகொள்.

[ஜரீனு ஹாலுக்கு வெளியே போகிருள்]

**மெஹ்ற் :** ஷௌபின்!...

**ஷௌ :** மேம ஸாஹிபா!

**மெஹ்ற் :** நீ உடனே சென்று உமர்கய்யாமை அழைத்து வா. என் தாய் கொடிய வியாதியில் படுத்திருப்பதாகச் சொல்லு.

**ஷௌ :** இந்நேரத்திலா?

**மெஹ்ற் :** மறு பேச்சில்லாமல் போய் வா.

[ஷௌபின் போகிருள்; சற்று நேரத்தில் உமர் கய்யாமுடன் வருகிருள்]

**உமர் :** இந்த ஹாலில்தானு?

[ஹாலில் நுழைந்த உமர் ஒரு மூலையில் மெஹர் படுத்திருப்பதைப் பார்க்கிருர்]

**மெஹ்ற் :** (சிரித்து) ஆம்......இந்த ஹால்தான்...

உமர் : யார? மெஹ்ருனா? நீயா?

மெஹ் : ஏன? என் தாயக்கு நோயே வராதா?

உமர் : உன தாயா? எங்கே? உம!...(மாறுவேஷமிட்ட ஜரீனாவைப பரீக்ஷித்து) இவா நாடியில் ஏதும் மாறுதல காணவிலலையே......என்ன மெஹருன்......அப்படிப் பார்க்கிறாய்...உன நோய் குணமாகி யிருக்குமென நமபுகிறேன.

மெஹ் : (மெதுவாக) ம...ஜரீனா நீ போகலாம!

[ஜரீனா எழுந்து போகிருள்]

மெஹ் : (கெஞ்சியவாறு) இனனுமொ இறைஞ்சிக் கேட்டுக் கொளகிறேன. உஙகளுடைய அனபு என்ற மூலிகை யாலதான என நோயைக குணபபடுத்த முடியும.

உமர் : என அனபு எலலாருக்கும உரியதுதான. அதில் ஒருத்திககு மட்டும தனி இடம ஒதுக்கப்படவிலலை!

மெஹ் : அப்படியானால் என்னிடம இரக்கமே ஏறபடாதா உஙகளுக்கு?

உமர் : உன்னுடைய அறியாத் தனத்தை எணணிப பார்த் தாலதான இரக்கமாக இருக்கிறது.

மெஹ் : (கோபமாக) அறியாத் தனம!...யாருக்கு அறியாத் தனம?...உமாகயயாம! நீஙகள் ஈரானின ஒப்பற்ற வைத்தியர்...ஆனால், ஒரு பேதைப் பெண்ணை உதா சீனம செய்கிறீர்கள...ம...பார்க்கிறேன..... உங்களை யார் வைத்தியராக்கிய தென்று!......(மிகவும கோப மாக) நான் பழிக்குப் பழி வாங்கியே தீரிப்பேன...

உமர் : உமர் ஒருவருக்கும கெடுதல் செய்வதில்லை... மற்றவர் ஏதும கேடிழைத்தாலும சினந்து கொள்வ தில்லை...

மெஹ் : ஆம. ஹிருதயம் கல்லாக இருக்கும்போது உணர்ச்சி பேதங்களுக்கு இடமேது? உங்களுடைய

கல் மனத்தில் அன்பைப் புகுத்தி உங்களையும் ஒரு மனிதராக்க விரும்புகிறேன். இந்த வேதாந்தம் எல்லாம் எட்டிச் சுரைக்காய் என்பதை அப்போது தெளிவாக உணர்வீர்கள்.

உமர் : என் வேதாந்தத்திலல்ல, என் மனோதிடத்திலும் என் நேர்மையிலும் எனக்கு நம்பிக்கை உண்டு. சற்று திரைப்பட்டிருக்கும் உன் பார்வை திருந்தி, நீயும் உன் நேர்மையை உணர்வாய் என்றும் நம்பிக்கை உண்டு.

மெஹ்ரு : ஆனால், என் நம்பிக்கை எப்படிப்பட்டது? என் ஆடலில் நடனத்தின் லாகிரியின்முன் மயங்காதவர், இந்த மாய மோகினியின் ஆடும் விழிகளில் சொக்காதவர், இந்நாட்டில் உண்டா என்று பார்க்கிறேன்... என்னுடைய அழகான கனவு, ஒரு நாளும் அரைகுறையாகச் சிதைந்ததில்லை.

[மயக்கும் நடனம் ஆடுகிருள்—உமர் யௌவனத்தின் லாகிரியில் இலேசாக மயங்குகிருர். ஆனல் ஒரு விநாடியில் தன்னைச் சமாளித்துக் கொள்ளுகிருர்]

உமர் : (சிரித்துக்கொண்டே) அதோ ஒரு சிலந்திப்பூச்சி அழகாக வலை விரித்திருக்கிறது...அது வலையென்று சொல்லும்!...அல்லது கலை யென்று பேசுமா? அதன் வாழ்வின் தேவை அது...ஈ வந்து அதில் விழுகிறது. அதன் உயிரை சிலந்தி உறிஞ்சிவிட்டால் பாவமா?... பின், சிலந்தி வாழ்வது எப்படி?......(சிரிக்கிருர்)

மெஹ்ரு : (பெருமையாக நகைத்து) இப்போது என்ன சொல்லுகிறீர்கள்?

[உமர்கய்யாம் தன்னுடைய வலது கையை நெருப்பில் புகுத்திக் கொள்ளுகிருர்]

உமர் : இந்தக் கணப்புச் சட்டியின் வெப்பம் உன் மோகத்தைவிட குளிர்ச்சியானது என்று சொல்லுகிறேன். என் கையை இப்படியே கரித்து......

**மெஹ் :** (தூக்கிவாரிப்போட்டு)...ஆ...என்ன இது? என்ன காரியம் செய்தீர்கள? தங்கள கையை இந்தக் கணப் புச் சட்டியில் இப்படிக் கரித்துக் கொணடீர்களே !.

**உமர் :** (சிரித்து) என மனம தாவுமோ எனறு நீ சந்தேகப் பட்டதால் !

**மெஹ் :** அதறகாக, தஙகள கவனத்தை என கவாசசியி லிருநது விலககவா, இவவாறு தஙகள கையைக கரித்துக கொண்டீர்கள? எல்லாம இநதப் பாவியின பொருட்டா? எத்தகைய துனபம!

**உமர் :** துனபத்துககும இனபத்துக்கும உளள தொடர்பு சாதாரணமானதுதானே!...துனபத்தில ஜரிகைக கரை இனபம...ஜரிகையை அணிநததால அழகி என்று நீ பூரிக்கிறய...

**மெஹ் :** (மிகவும கலஙகி) தஙகள் கையைச காண எனனுல் சகிக்க இயல வில்லேயே.

**உமர் :** பெணணே ! உன்னுடைய சாகஸம இந்த உமர் கயயாமை ஒனறும செயயாது. (சிரித்து) வெறும மக்கள வாயில் புரளும காதல், எனனிடம கருகிக கிடப்பதைக கவனித்தாயா ?

**மெஹ் :** தஙகளுடைய பெருமையை அறியாத இந்தப் பாவி! இந்த ரணம ஆற எத்தனே மாதங்களாகுமோ?

**உமர் :** ஆணடவனின் கருணேயால் உன பாபச்செயகையி னின்றும் நீ உன்னேக் காப்பாற்றிக் கொண்டால், அந்த மன நிம்மதியே என் ரணத்தை ஆற்றிவிடும.

**மெஹ் :** (அழுதவாறு) என்னே மன்னிப்பீர்களா? எனக்கு மன்னிப்பு உண்டா? (வணங்குகிறள்)

**உமர் :** தலே வணங்காதே!...ஆண்டவனேத் தவிர வேறு யாருககும தலே வணங்கக்கூடாது. என்னேப் பாபி யாக்காதே...

மெஹ்: தங்களுக்கு சிஷ்யையாகக் காலங் கழிக்கும் பெருமையையாவது எனக்கு அளிப்பீர்களா?...(அழுத வாறு) 'இதுதான என் உலகம்!'...என்று தங்கள் கால்களைப் பிடித்துக் கொள்ள எனக்குத் தகுதி உண்டா!

உமர்: மெஹருன்! எழுந்திரு...என் ஆட்டோடு நீயும் உடன இரு...சிஷயையாக அல்ல...சரி சமமான ஸ்தானத்தில......உம......எழுந்திரு. அழுவதற்காக ஆண்டவன் நமமைப் பிறப்பிககவில்லை.

மெஹ்: இநதப் பேறு பெற எனக்கு யோக்கியதை உண்டா?...உஙகளுக்குச சமமாக......

உமர்: நீ எனக்குச் சமம எனபதுபொய...நான் உனக்குச் சமம எனபதுதான மெய...

[கதவு படாரென்று திறக்கிறது; கியாஸ்பேக் உள்ளே நுழைகிருன்]

கியாஸ்: சபாஷ்!... மெஹருன! சபாஷ்!......உமர்கய்யாம் சாஹேப்! ஹூம......பாவம செயய வேண்டுமானல் மறைவில்தான் செயய வேண்டுமா?

உமர்: கியாஸபேக்!...இந்த உலகிற்குச் சத்தியம் தேவை இல்லை. போலித் தோற்றமதான வேண்டும்.

கியாஸ்: இதென்ன புது ஆட்டம ஆடுகிருய் மெஹருன்?

மெஹ்: (கோபமாக) என உத்திரவின்றி எப்படி என் அறையில் புகுந்தாய்?

கியாஸ்: (நகைத்து) ஆம்......இந்தக் கோலத்தில் நான் உன்னைப் பார்க்கலாமா? உன்னுடைய உடையும் அலங்காரமும்...உன்னுடைய நடத்தையைப் பற்றி நான் கொண்டிருந்த உயர்ந்த அபிப்பிராயம் என்ன?... மதிப்பென்ன? இப்பொழுது நான் காணும் காட்சி! யா அல்லாஹ்! (கேலியாக) ஈரானின் புகழ் பெற்ற

கவியாரே!...உயர்ந்த ஜீவனுள்ள கவிதை இயற்று வதற்காக இப்படிப் பழகுகிறீரோ?

**உமர் :** தன உள்ளம எதிரொலிப்பதில் வியப்பேது?

**கியாஸ் :** ஏய!...சரியாகப் பதில் சொல்...நீ எப்படி இங்கு உள்ளே வந்தாய்?

**உமர் :** திருடனைப்போல், பதுங்கி நின்று உற்றுக கேட்ட பிறகல்ல...சாதாரண மனிதரைப் போல, மனதில் கபடமின்றி!

**கியாஸ் :** (மிகவும் இளககாரமாக) ஓ!...தாஙகளும சாதாரண மனிதர்களில் ஒருவர்தானு?

**உமர் :** இந்த உமர் தரித்திரத்தைப் பொறுப்பான...தாழ்வுச சொல்லைப் பொறுககமாட்டான.

**கியாஸ் :** திருட்டுத்தனமாகக காதலிப்பது தாழவு இல்லையா?

**உமர் :** (போய்க்கொண்டே) காதலிக்க எனககும உரிமை இருக்கத்தான செயகிறது. மனித வர்க்கத்தை நேசித்து, அவர்களுடைய சிருஷ்டி கர்த்தாவை காதலிககும எனனுடைய காதலில் குறுக்கிட யாருக் கும உரிமை இல்லை!

**கியாஸ் :** உம...போம......பொது இடத்தில் உன்னைச் சந்திககும்போது பார்த்துக் கொள்ளுகிறேன்.

**உமர் :** (போய்க்கொணடே) உச்சிக் கிளையிலே நின்று கொண்டு பாதம் ஊன்றியே வந்த அடிமரத்தை அச்ச மில்லாமல் வெட்டும் உலகமல்லவா இது...

[சிரித்துக்கொண்டே போகிறர்]

**கியாஸ் :** மெஹ்ருன்!...உன் மேல் நான் கொண்ட காதல் அழியாதது என்று எண்ணினேன் ..ஆனல், பொறு மையால் எரித்துவிட முடியும் என்று இன்று கண்டு

கொண்டேன்...உன்னுடைய இந்த நிலைக்கு என்ன காரணம காட்டுகிருய்?

**மெஹ்ர் :** உன் சிறுமைக்கும் அவர் பெருமைக்குமுள்ள வித்தியாசத்தை! ந ா ன அவரை மயக்கப் பார்த்தேன்; மறுத்துவிட்டார். கெஞ்சினேன; கேட்கவில்லை. மிரட்டினேன்; ம ரு ள வி ல் லை . எதிர்த்தேன; ஏமாறவில்லை. நீயோ?...வெறுக்கிறேன்; விலகமாட்டேனென்கிருய் !

**கியாஸ் :** பேஷ்!...அற்புதமாக இருக்கிறது உன் கற்பனை ! ஆனல் நான ஏமாந்து நிற்கிறேன...மெஹ்ருன்!... இதோ பார்...உன் அழகு ஈரான தேசத்து வாலிப உள்ளஙகள பலவற்றைச் சின்னுபின்னப்படுத்தி விட்டது நீ இந்த யௌவன அழகு பெற்றிருக்கும வரை தானே என உள்ளமும் உனனை நாடி நிற்கும. • •

**[கணப்பு நெருப்பிலிருந்து இரண்டு இரும்புக் கம்பிகளை எடுக்கிருன்]**

**மெஹ்ர் :** (பயந்து) ஆ!...இதென்ன அனல் வீசும கம்பிகள்?

**கியாஸ் :** (கடுமையாக) கைக்கெட்டிய கனி தின்னத் தடைப்பட்டால் கசக்கிப் பிழிந்து குப்பையில் வீசு என்பதே என சித்தாந்தம.

**மெஹ்ர் :** (கெஞ்சி) ஆ !...நெருப்புத்தணல் வீசும் இவைகளால்......

**கியாஸ் :** கொக்கு எந்த மீனுக்காவது உரிமை கொடுத்ததுண்டா? நீ என்னுடையவள் அல்லவென்ருல், ஒருவனும் உன்னைச் சிந்தக் கூடாது...உன் கன்னத்தைச் சுட்டு எ ரி த் து உன்னைக் கோரமாக்கிவிட்டால் யார் உன்னை அணுகுவார்கள் எனறு பார்க்கிறேன்.

**[கன்னத்தைச் சுட்டுவிடுகிருன் — மெஹர் வலி பொறுக்க முடியாமல் துடிக்கிருள்]**

**மெஹ்ர் :** ஹா !...யா அல்லாஹ் !...நான் ம ன த் த ா ல் நினைத்த தீய செய்கைக்கு, இதுவோ தண்டனை?...

**கியாஸ் :** *ம......வெளியேறு...இந்த அழகிக்கு இனிமேல் என் மாளிகையில் இடமில்லை.*

**[மெஹர் கதறியவாறு உமர்கய்யாமிடம் போக விரும்புகிருள். ஆனல் முதலில் அவர் விருப்பம் அறிய, தோழிகள் போகிருர்கள்; உமர்கய்யாம் அவள் நிலையை அறிந்து திடுக்கிடுகிருர்]**

**உமர் :** *ஹா!......என்ன? அவலக்ஷணமான இந்த உலகில் சௌந்தர்யத்துககு இடமில்லையா?*

**ஷௌ :** *ஆம்...ஹுஸைர்...நீஙகள சென்ற பிறகு, சற்று நேரத்தில், மெஹ்ருன கன்னத்தை அநதப் பாவி கியாஸ்பேக் பொசிக்கி விட்டான்.*

**உமர் :** *கொடி போன்ற அவளுடைய மென்மையான உடல் இதை எப்படித் தாங்கும்?*

**மும்தாஜ் :** *அலறித் துடித்துவிட்டாள்......ஆனல், இந்த வேதனையைவிட இன்னெரு வடுதான் அவளைச் சித்திரவதை செயகிறது.*

**உமர் :** *என்ன அது?*

**ஷௌ :** *தங்கள பரந்த மனப்பான்மையை அறியாது, தங்கள் மனம் புண்படுமபடி நடந்து கொண்டாளாம்... தங்களிடமிருந்து மன்னிப்புப் பெறறு, தங்கள் சிஷ்யையாக மாறினல் ஒழிய, அவள மனபாரம குறையாதாம்.*

**உமர் :** *அறிவில்லாத பெண்ணே!...ஒரு தந்தை, குற்ற மிழைத்த தன் மகனை வீட்டை விட்டே துரத்திவிட்டால், அவன் தந்தையின் ஹிருதயம் படைத்தவனு?... தன் தவறை மெஹர் உணர்ந்த அந்தக் கணமே, அவளை நான் ஏற்றுக் கொண்டேனே!...ம...முதலில் அவள் கன்னங்களுக்கு மூலிகை வைத்துக் கட்ட வேண்டும்...அவளை ஏன் உங்களுடனேயே அழைத்து வரவில்லை?*

மும்தாஜ் : தங்கள அபிப்பிராயம் எப்படி யிருக்குமோ என்று பயந்துகொண்டே இருக்கிருள், இதோ உடனே போய் அழைத்து வரட்டுமா?

உமர் : உடனே போங்கள! பைத்தியக்காரப் பெண்! புத்தி சாலி என்று எண்ணினேனே. (ஆட்டைப் பார்த்து) அஸ்கல்ப்...பார்த்தாயா பாய் உலகப் போக்கை !

[ஆடு கத்துகிறது—தோழிகள் போய் மெஹறை அழைத்து வருகிருர்கள். உமர் மெஹறுக்கு மருந்து வைத்துக் கட்டுகிருர். அவர் ரணம் பூரணமாகக் குணமடைகிறது]

## காட்சி 5

[மெஹ்ருன்னிஸா தெருவழியே போவதை கியாஸ் பேக்கும் அவன் தோழர்களும் கவனிக்கின்றனர்]

கியாஸ் : அமீர் கவனித்தாயா?

அமீர் : பல விஷயங்களேயும கவனித்தே வருகிறேன்.

கியாஸ் : அதோ வருகிருளே...அவள் மெஹ்ருன்தானே.

அமீர் : மெஹ்ருனுக்கு இத்தனை அழகு ஏது?

கியாஸ் : மடையன்!...அவள மெஹ்ருன்தான்...அவளு டைய கன்னங்களில்தான் என்ன வசீகரம் !...சுட்டுப் பொசுக்கிய கன்னங்களா? கண்களில்தான் எத்தகைய ஜ்வலிப்பு ! இந்தப் புது வனப்பு அவளுக்கு ஏது ?

அமீர் : ஒரு வேளை, அவள் புன்முறுவலில் மிளிர்ந்த அகம் பாவம மறைந்து, முகத்தில் ஒரு சாந்தம் ஏற்பட்டிருக் கிறதே, அதனுலோ ?

கியாஸ் : என்னை விட்டுப் பிரிந்து, அவள் அந்த ஆண்டி உமருடன் இருப்பதா? இதற்கு ஒரு முடிவு வேண்டும் !

**அமீர் :** தாங்கள் என்ன செய்யச் சொல்லுகிறீர்களோ அவ்விதமே செய்துவிடுகிறேன்.

**கியாஸ் :** துடைக்கமுடியாத பழியை அந்த உமர்மேல் சுமத்தி, அவனை ஊரை விட்டே விரட்ட வேண்டும்.

**அமீர் :** எவ்வளவோ செய்து பார்த்துவிட்டோமே!

**கியாஸ் :** மடையன்!...ஊரில் தொத்து நோய் இருக்கிறது. ...அதுவும் நமக்கு நல்லதுதான்...நான் சொன்னது போலச் செய!...பிறகு பார்...

[ஊரில் ஒரு கூட்டத்தைச் சேர்த்து, உமர்மேல் அடாத பழியாக வம்பு பேச ஆரம்பிக்கிறார்கள் கியாஸ்பேக்கின் ஆட்கள்]

**குலாம் :** ஊரில் எங்கு பார்த்தாலும் ஒரு தொத்து நோய் பரவியிருக்கிறதாமே?

**கரீம் :** அதை ஏன் கேட்கிறீர்கள்?

**குலாம் :** ஏன்? என்ன சமாசாரம்?

**ரஹீம் :** அந்த நோய் எங்கள் வீட்டிலேயே புகுந்திருக் கிறதே!

**குலாம் :** உங்கள் வீட்டிலேயா?

**கரீம் :** ஹூம்...என் அம்மாவிற்கு உடம்பு சுகமில்லை... பாப்புவோ படுக்கையாகப் படுத்துவிட்டார். நல்ல வேளை! ஆண்டவன் குழந்தை ஒன்றும் கொடுக்க வில்லை. இல்லை என்றால், அதுவும் பாயோடு படுத் திருக்கும்.

**குலாம் :** இதற்கு ஏதாவது நல்ல மருந்தாகப் பார்த்து...

**கரீம் :** எல்லா ஹக்கீம்களும் நல்ல மருந்தாகப் பார்த்துத் தான் தருகிறார்கள்...ஹூம்!...எல்லாவற்றிற்கும் மேலாக, என்...என...

**குலாம் :** சொல்லுங்கள்.

கரீம் : (வெட்கமாக) வீட்டுக்காரியும பாயில் படுத்துவிட்டாள். எனக்கு என்ன செயவதென்றே தோன்றவில்லை.

குலாம் : அடடா!......

[அமீர் மிகவும் வேகமாக வருகிருன்]

அமீர் : இவ்வளவுக்கும் காரணம என்ன தெரியுமா?

குலாம் : அடடே. நம்ம அமீர்ஜான பாய் வந்துவிட்டார்களே?

கரீம் : இந்த நோய்க்கு என்ன காரணம என்று சொல்லுகிறீர்கள?

அமீர் : இது உங்கள் வீட்டில் மாத்திரமல்ல, இந்த ஊர் முழுதும எங்கும் பரவி இருககிறது தெரியுமல்லவா?

குலாம் : அதனுல் நிம்மதி அடையலாம என்கிறீர்களா? என்ன அமீர் பாய் நீங்கள...?

அமீர் : சேச்சே...இந்தத் தொத்து நோய்க்குக் காரணம் அல்லாஹ்வின் கோபம என்றுதான கொள்ள வேண்டும்.

கரீம் : அல்லாஹ்வின் கோபமா? நான் அப்படி ஒன்றும் தப்புத் தண்டா காரியத்துக்குப் போகமாட்டேனே!

அமீர் : நீங்கள் போகாவிட்டால் என்ன? மற்றவர்கள் செய்தால், ஊரிலுள்ள எல்லாரும சேர்ந்துதானே தண்டனை அனுபவிககவேண்டும்.

குலாம் : இது சரியான பேச்சு அமீர். நம் கியாஸ்பேக் செய்யும் முட்டாள காரியத்துக்காக, ஒவ்வொரு சமயம உங்களை முட்டாள் என்று நான் நினைத்துக்கொள்ளுவதுண்டு.

[மெஹரின் தோழி மும்தாஜ் வருகிருள்]

மும்தாஜ் : கிராமத்திலே என்ன அப்படி அக்கிரமம் நடந்து விட்டதாம ?

அமீர் : எல்லாம் உங்கள் உமர்கயயாம செய்வதுதான்.

மும்தாஜ் : அவர்கள பேச்சை எடுத்துப் பேசாவிட்டால் உங்களுக்குப் பொழுதே போவதில்லை போல் இருக்கிறதே !

அமீர் : வாய் கூசாமல் சொனனல் ஆண்டவனுக்குக் கோபம் வராமலிருக்குமா ?

மும்தாஜ் : அப்படி என்னதான சொல்லிவிட்டார் ? உங்கள் அறியாமையையா ?

அமீர் : நான் சொல்லட்டுமா ?

குலாம் : சொல்லுங்களேன் பாய் !

அமீர் : அவர் என்ன சொன்னர் என்று உங்களால் ஊகிக்க முடியுமா? உங்களுக்குத் தெரியவே தெரியாது.

குலாம் : ஆமாம, தெரியாது ! வேண்டாம !!

மும்தாஜ் : உங்கள் மூளையிலிருந்து கிளமபும் வதந்திகளைத் தெரிந்துகொளளை வேண்டிய அவசியமில்லை.

அமீர் : (மிகவும் அக்கரையுடன்) நீங்கள் என்னவென்று அவசியம கேட்பீர்கள ?

கரீம் : ஆமாம, உள்ளது தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசையும் இருக்கத்தானே செய்கிறது !

அமீர் : அவர் என்ன சொன்னர் தெரியுமா ?...நான் ஏன் சொல்ல வேண்டும...

குலாம் : ஆமாம் வேண்டாம்.

அமீர் : வேண்டுமென்றல் கேளுங்கள் ! என்னவென்று கேளுங்கள் ! கேட்கவே கூசுகிறதா ? அவர் என்ன தான் சொன்னர் தெரியுமா — மெஹ்ருன்தான் அவருடைய ஆண்டவனும் !

**ரஹீம் :** ஆ!.........என்ன சொன்னார்? உமரா அப்படிச் சொன்னார்?

**கரீம் :** ஆண்டவனைக் கேவலம் மானிட ஜன்மத்தோடு ஈடு செய்தா பேசினார்?

**மும்தாஜ் :** (கோபமாக) இந்த மாதிரி புரளிகளைக் கிளப்பி விட வேண்டுமென்று எத்தனை நாட்கள் காத்துக் கொண்டிருந்தீர்கள்? இது அடுக்காது.

**ரஹீம் :** உங்கள் உமர் சொன்னது மாத்திரம் அடுக்குமா?

**கரீம் :** இது மாதிரி கொடிய பாபிகள் இருந்தால் தொத்துநோய் வந்து இந்த ஊர் மக்கள் மட்டுமா மாண்டுபோவார்கள்? பிரளயம் வந்து உலகமே அழிந்துபோகும்.

**மும்தாஜ் :** உமரைப் போன்ற ஒரு சில நல்லவர்களால் தான் உலகம் இன்னும் நிலைத்து நிற்கிறது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்.

**அமீர் :** சரி உமர்கய்யாமின் திறமைக்கு அடங்காத நோய் இருந்ததுண்டா? அவரால் இந்த நோயை இதுவரை குணப்படுத்த இயலவில்லையே, ஏன்?

**ரஹீம் :** இப்பொழுது தோல்விக்குக் காரணம்?

**குலாம் :** காரணம் வேறு என்ன?

**கரீம் :** ஆண்டவன் கோபத்துக்குக அவர் காரணமானதுதான். ஆண்டவனோடு மற்றவரை இணை வைத்த அவர், இந்த நோய்க்கு ஒரு மருந்து தர வேண்டும்; இல்லாவிட்டால் இந்தக் கிராமத்தை விட்டு அவர் போகவேண்டி யிருக்கும்.

# காட்சி 6

[உமர்கய்யாமின் மீது, சுமத்தப்பட்ட அபாண்டப் பழியைப்பற்றி மெஹர் கேள்விப்பட்டு வருந்துகிறாள்]

**மெஹ்ருன் :** *கிராமத்தை விட்டுப் போகவேண்டுமா, ஏன்?*

**மும்தாஜ் :** *மெஹருன்னா! நீ நோயால் பீடிக்கப்பட்டிருக்கிறாய். உடம்பை அலட்டிக்கொள்ளாதே. (மறைக்க முயற்சித்து) யார் இவ்விதம் சொன்னது?*

**மெஹ் :** *என்ன? கிராமமுழுவதும், குழந்தைக்குக் குழந்தை பேசிக் கொண்டிருக்கிறதே, ஏன் அப்படி?*

**மும்தாஜ் :** *நீ மிகவும் பலஹீனமாய் இருக்கிறாய். உனக்கு குணமேற்படட்டும். பிறகு இதெல்லாம் பேசலாம்.*

**மெஹ் :** *இல்லை, எனக்குக் காரணம் தெரியவேண்டும், இவர் ஏன் இந்தக் கிராமத்தை விட்டுப் போக வேண்டுமாம்?*

**மும்தாஜ் :** *அவர் பெரிய தவறு செய்து விட்டாராம்! இதனால்தான் ஊரில் அடக்க முடியாத தொத்து நோயாம்!*

[உமர்கய்யாம் அங்கு வருகிறார்]

**உமர் :** *மெஹ்ருன், நான் பெரிய தவறுதான் செய்து விட்டேன் இல்லாவிட்டால் இந்த நோய் இப்படித் தலை விரித்தாடி இருக்க முடியுமா?*

**மெஹ் :** *தங்களாலும் தவறு இழைக்க முடியுமா? நான் நம்பவில்லை.*

**உமர் :** *நக்ஷத்திரங்களின் சேர்க்கையைக் கணிக்க மறந்து விட்டேனே,...அது ஒரு வகையில் பிசகுதானே. நல்ல வேளை! இப்பொழுதாவது ஆண்டவன் அறிவைத் தெளிவடையச் செய்தான்! என் மெஹ்ருனை இனி*

நான் காப்பாற்றிவிடுவேன். இந்த நோய்க்கு எது மருந்து என்று கண்டுகொண்டேன்.

மெஹ்ற்: (மகிழ்ச்சியுடன்) தங்களுக்கு வெற்றியா?

உமர்: உமர் ஒரு நாளும் நம்பிக்கையை இழக்க மாட்டான். எத்தனைய சுபவேளை! ஆஹா......நக்ஷத்திரங்களின் சேர்க்கையின் மகத்துவமதான் என்ன? இந்த நல்ல வேளை மீண்டும் 7000 வருஷங்களுக்குப் பிறகுதான் கிடைக்கும். இந்த வேளையில் நான் செய்த மருந்து, இந்த மூலிகையைக்கொண்டு நான் தயாரித்துள்ள இந்தத் தைலம், மெஹ்றுன்னின் நோயை மட்டுமல்ல, இந்தக் கிராமத்திலுள்ள எல்லாருடைய நோயையும் தீர்த்துவிடும்!...ஏரான் இனி செத்தவர்கள் வீடல்ல. வீட்டுக்கு வீடு இனி அழுகுரல் கிடையாது......மெஹ்றுனை விட எனக்குப் பிரியமானது என் பாய் ஆடு அஸ்கல்ப ஒன்றுதான். இந்த மருந்தைச் செய்த என் திறமைக்கு ஊக்கமளித்தது அவர்கள் அன்பு...

[ஆனந்த மிகுதியால் அவர் குதிக்க அவர் கையிலிருந்த சீசா தவறி கீழே விழுந்து உடைகிறது]

மெஹ்ற்: (திடுக்கிட்டு) ஆ!......என்ன!......சீசா உடைந்து விட்டதா? அரும்பாடுபட்டு இரவும் பகலுமாக உழைத்துச் செய்த மருந்து எல்லாம் கீழே கொட்டிப் போய்விட்டதா? (பலஹீனத்தால் இருமுகிறாள்)

உமர்: (மனம் ஒடிந்து) ஆண்டவனே! என்ன செய்தாய்? இனி என்ன செய்வேன்? நல்வேளையில் கிடைத்த இந்த மருந்து வீணாகி விட்டதே! பாய் அஸ்கல்ப்! பார்த்துக்கொண்டாயா?

[ஆடு பரிதாபகரமாகக் கத்துகிறது]

மெஹ்ற்: (கவலையுடன்) இனி என்ன செய்யப்போகிறீர்கள்?

**உமர் :** ஆண்டவனை மறந்து கர்வம கொண்ட உமர்கயயா முக்கு இது தண்டனை. எவவளவு கர்வத்தோடு சற்று முன பேசினேன. இந்தத் தணடனை எனககு உரியதே. ஆனால் இந்த நோயககு மருந்து? இனிமேல் நான என்ன செயயப்போகிறேன ?

[தூண்டிவிடப்பட்ட ஜனத்திரள் கூட்டமாக உமர் இருக்குமிடம் வருகிறது]

**அமீர் :** நோய்க்கு மருந்து கொடுகக முடியாத நீரே அழிய வேண்டியது தான்.

**குலாம் :** உமமோடு உமமுடைய துஷட நடத்தையும் அழிய வேண்டும. அப்போதுதான ஆண்டவன எங்களை மன்னிப்பான்.

**அமீர் :** வேடிக்கை என்ன? கொளுத்துங்கள இவன வீட்டை.

[உமரின் வீட்டுக்குத் தீ வைக்கிறார்கள்]

**மெஹ்ற :** என்ன, நம் வீட்டுககுத் தீ வைத்துவிட்டார்களா? யா! அல்லாஹ்!

[இருமியவாறு மயக்கமுற்று விழுகிறாள்]

**உமர் :** பாவம்! பேதைப் பெண் அவளால் எவ்வளவு சமாளிக்க முடியும்? மயக்க மடைந்துவிட்டாள்.

[தீ பற்றி எரிகிறது; உமர் மெஹறரைத் தூக்கிக் கொண்டு வெளியே வருகிறார்; அவர் உடலில் பல இடங்களில் தீப்பட்ட புண்]

**உமர் :** (திருப்தியுடன்) ஹூம்!......என் வீட்டுக்குத் தீ வைத்து, இவர்கள் எவ்வளவு நல்ல சேவை செய்துள்ளார்கள். ரோஜா மலரைக் கசக்கிப் பிழிந்தால்தானே பன்னீர் கிடைக்கிறது இவ்வுலகில்!

**மெஹ்ற் :** (மயக்கம் நீங்கி) என்ன? என்னை நீங்களா அப் புறப்படுத்தினீர்கள்? உங்கள் உடல் எல்லாம் தீக்காயம்.

**உமர் :** இந்தக் காயம் என் கண்களைத் திறந்து விட்டதே! எனக்குச் சொந்தம் என்று ஒரு தனி இடத்தை எண்ணி இருந்தேன். வீடிழந்த எனக்கு இனி உலகமெல்லாம் என் தங்குமிடமே.

**மெஹ்ற் :** ஆ...இதென்ன? என் உடலில், ஒரு புதுப்பலம் தோன்றி இருக்கிறது....நைந்து நைந்து விழுந்த, என் கைகால்கள் எல்லாம் புத்துயிர் பெற்று விட்டனவே! என்ன, என் நோய் குணமாகிவிட்டதா?

[மும்தாஜ் மகிழ்ச்சியுடன் வருகிருள்]

**மும்தாஜ் :** ஆம், மெஹறுன்! கிராமத்தில் நோய்ப் பட்ட வர்கள் எல்லாரும் குணமடைந்து விட்டார்கள்... எல்லாரும் உற்சாகத்தோடு காணப்படுகிருர்கள்.

**உமர் :** ஆண்டவா!...உன் கருணை எவ்வளவு விசால மானது! ஒரு சிசாவில் மருந்தடைத்து குணப்படுத்த எண்ணினேன், நீ என் வீட்டையே எரித்து மூலிகையின் புகையை ஊரெங்கும் பரவச் செய்து எல்லோரையும் ஒரே சமயத்தில் குணப்படுத்திவிட்டாய்.

**மும்தாஜ் :** ஆனல், ஊரில் என்ன பேசிக்கொள்ளுகிருர்கள்?

**உமர் :** என் வீட்டை எரித்து, நான் செய்த பாவத்தைக் கரிக்கி எடுத்ததன் நற்பயனென்று பேசிக் கொள்ள லாம். எப்படியாவது இருக்கட்டும். என் கிராம மக்கள் சுகமாக வாழ்வதை விட எனக்கு வேறு என்ன சந்தோஷம் பாய! அஸகல்ப்!...கிளம்பு, போகலாம்... உன்னைத் தனியே விட்டா போவேன்? உன் புன்ன கையைக் கண்டுதானே, நான் உலகத்தின் இனிமையை அளக்கிறேன்.

[ஆட்டுடன் புறப்பட முயற்சிக்கிருர்]

மெஹ்: *நான் வரவேண்டாமா?*

உமர்: *மெஹ்ருன! நீயும உடன வருகிருயா?*

மெஹ்: *இது என்ன கேள்வி? உங்கள் அன்பையே ஆபரணமாக அணிந்த நான் அதைக் கழட்டி விட இயலுமா?*

உமர்: *உம்...நீயும் வா......பரந்த உலகமே நமதென்ருல், குறுக்கே சுவர் வேண்டுமா? ஆண்டவன் கட்டளைப் படி அதை மற்றவர் இடித்துத் தள்ளி விட்டனர். இனி தாராளமாக நந்தவனத்தில் உலாவுவோம். பன்னீர் மணத்தை நுகர்வோம. பரந்த உலகந்தான இனி நம் வீடு! திறந்த வெளியில், இயற்கையான எழிலில் நீ உற்சாகமாக நடனமாட, நான் கண்டு களித்து கவிதைகள் இயற்றுவேன்! உம்! கிளம்பு...*

['வீட்டுக் கூரையை நம்பி எத்தனை நாட்கள் இருப்பது? அதை நம்பி வாழ்நாளை வீணுக்காமல், எம் பெருமானுரைப் போற்றி வாழ வேண்டும்' என்ற கருத்துடன் மெஹ்ருன் பாட, ஆடு அஸ்கல்ப் பின்வர, உமர் கய்யாம் மகிழ்ச்சியுடன் வெட்ட வெளியை நோக்கிப் போகிருர்]

## காட்சி 7

[நிஜாமுல்–முல்கின் அரண்மனை—குலாப் மஹாலில் அமர்ந்தவாறு ஸுல்தாஞ உமர்கய்யாமின் கவிதை ஒன்றைப் படித்து அதனுடைய ஆழ்ந்த கருத்தில் மூழ்கி இருக்கும்போது, நிஜாமுல்-முல்க் வருகிருர்]

ஸுல்தாஞ: *கவிதை என்ருல் இதுவல்லவோ கவிதை!... "மண்ணைச் சுற்றி வந்துவிட்டார்! வானையும் கணக்கிட்டு அளந்து விட்டார்! ஆனல் ஒரு விந்தை*

மாத்திரம் இவருக்கும் விளங்கவில்லையாம்?..."இறப்பு என்பது என்ன? சூழ்வினை என்று சொல்லுகிறார்களே அதன் அர்த்தந்தான் என்ன?"...ஹூம்! இந்தக் கவிஞரை நேரில் சந்தித்து, அவர் கவிதைகளின் சாற்றை அவரிடமிருந்தே பருக வாய்ப்புக் கிடைத்தால்... எத்தனை தடவை படித்தாலும் கவிதை திகட்டவில்லையே!...

**[நிஜாமுல் - முல்க் ஸுல்தானு அருகில் மரியாதையுடன் வருகிறார்]**

**நிஜாம் :** ஸுல்தானு ஸாஹிபா! தாங்கள் என்ன படிக்கிறீர்கள?

**ஸுல்தானு :** உமர்கய்யாம அவர்களின் கவிதை அமுதந்தான! எத்தகைய கருத்துக்கள்!......இதோ மற்றொரு பாடலின் கருத்தைப் பார்த்தீர்களா?

**நிஜாம் :** எங்கே?......எவ்வளவு அற்புதமாக, ஆனால் சுருக்கமாகச் சொல்லியிருக்கிறார். இதயத்தில் நேர்மை இருந்தால் குணத்தில் அழகு இருக்கும்; குணத்தில் அழகு இருந்தால் வீட்டில் ஒற்றுமை இருக்கும்......

**ஸுல்தானு :** வீட்டில் ஒற்றுமை இருந்தால் நாட்டில் ஒழுங்கு இருக்கும; நாட்டில் ஒழுஙகு இருந்தால் உலகில் கருணை இருக்கும்...உலக தேசங்களை சமாதானமாக வாழ எத்தகைய சுலபமான வழி!

**நிஜாம் :** இவ்வளவு உயர்ந்த கருத்துக்களை படைக்கிறாரே, இருந்தும் அவரிடந்தான் எத்தகைய அடக்கம்!

**ஸுல்தானு :** அவருக்கு எதிராகவும் இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்து வருகிறார்களே!...என்றாலும், உலகில் சூழ்ந்துள்ள இருள முழுவதும் சேர்ந்தாலும் ஒரு கைவிளக்கின் ஒளியை அணைத்துவிட முடியாது.

**நிஜாம் :** இந்தப் பகைமைக்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள் பேகம் ஸாஹிபா?

**ஸால்தானு :** பொறுமைக்குக் காரணம் கூட வேண்டுமா?... மேலும், பயனுள்ள புதிய கருத்தை ஜனங்கள் ஏற்கும் படி செய்வது மிகவும் கடினம். அதைவிடக் கடினம், பயனற்ற பழைய கருத்து ஒன்றை அவர்கள் கைவிடும்படிச் செய்வதுதான்.

**நிஜாம் :** இந்த ஜனங்கள் தங்கள் மூட நம்பிக்கைகளை மறக்க எவ்வளவு தயங்குகிறார்கள்!

**ஸால்தானு :** உமர்கய்யாமுடன் நானும் சில காலம் பழகினேன். அப்பொழுது அவரை நான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. "நாம் தொழுவதைக் கொண்டு ஜீவிக்கிறோம்; ஆனால் கொடுப்பதன் மூலந்தான் வாழ்கிறோம்!" என்று அடிக்கடி சொல்லுவாரே, அதன் கருத்தை இப்பொழுதுதான் உணர்கிறேன்.

**நிஜாம் :** இன்னும் அவர் வறுமையால் கஷ்டப்படுகிறாரே. உங்களைப் போன்ற ஸாஹிபாக்களை நாடினால் எவ்வளவு விரைவில் அவரது தொல்லை விலகிப் போகும்.

**ஸால்தானு :** (சிரித்து) உங்களுக்குத் தெரியாததில்லை நிஜாமுல்-முல்க! நம தொல்லைகளை விளம்பரம் செய்வதில் அர்த்தமே இல்லை. அவைகளுக்குச் சந்தையே கிடையாது.

**நிஜாம் :** ஆனால், உமர்கய்யாமின் எதிரிகள் இதற்குத் தலைவிதி என்று பட்டம்சூட்டுகிறார்கள்! என்ன அறியாமை!

**ஸால்தானு :** (சிரித்து) 'தலைவிதி' என்ன தெரியுமா? மனிதர்கள் தாங்கள் புரியும் தவறுகளையெல்லாம் ஒன்றாகக் குவித்து ஒரு ராக்ஷசனை சிருஷ்டி செய்கிறார்களே, அவனுக்குத்தான் 'தலைவிதி' என்று பெயர்.

**நிஜாம் :** சரியாகச் சொன்னீர்கள். 'விதிவிட்டவழி' என்று மண்டியிட்டால், விதி உடனே ஆட்கொண்டுவிடுகிறது.

**ஷால்தாஜ் :** நம உமர்கய்யாம் என்றைக்குமே தம்முடைய விதிக்கு அடி பணிய மாட்டார். அவருடைய அன்பு உள்ளம் நிறைந்து வழிந்தோடும வரை, அவருக்குக் கவலை யென்பதே இல்லை.

**நிஜாம் :** ஆம, அடியோடு கொடுத்து ஒழிக்க முடியாத பொருள் அனபு ஒன றுதானே !

**ஷால்தாஜ் :** (சிரித்து) சிறிது பொறுத்தால், அது இரண்டு மடஙகாகத் திருமபி வந்துவிடுகிறது

**நிஜாம் :** (சிரித்து) இதனுல்தானே எனனவோ, குழந் தைகள் எனருல் உமர்கயயாமுககுத் தனி வாஞ்சை !

**ஷால்தாஜ் :** குழந்தைகளை மலர்களுக்கு ஈடாக அல்லவோ அவர் மதிக்கிருர். எந்தத் தேசத்துக் குழந்தையாக யிருந்தால் என்ன, அவைகள ஒன்று சேர்ந்தால் சற்று நேரத்தில் அனனியோனனியமாகி விடுகின்றன. காரணம அவைகள பேசுவது ஒரே பாஷை—சிரிப்பு !

**நிஜாம் :** இத்தகைய பெருமையுடைய உமர்கய்யாமை நம தலைநகருக்கு அழைத்து நாம பெருமைகொள்ள வேண்டாமா ?

**ஷால்தாஜ் :** இதைச் சொல்ல வேண்டுமென்றுதானே நான் தங்களை நாடி வந்தேன். ஆனுல், அந்தக் கவி அவ்வளவு சுலபமாக இங்கு வர இணங்குவாரா ?

**நிஜாம் :** அவர் ஏழ்மையைப் பயன்படுத்தி, நாம் ஒருநாளும் அவரை இங்கு அழைக்க முடியாது…“நான் ஏழை என்ற உணர்ச்சியில்தான் இருக்கிறது ஏழ்மை” என்ற தத்துவத்தை அந்தக் காலத்திலேயே அவர் என்னிடம் சொல்லி இருக்கிருர்.

**ஷால்தாஜ் :** மிகவும் ஆடம்பரத்துடன் அவரை இங்கு வரவழைக்கலா மென்ருல், ‘புகழுக்கெல்லாம்

பாத்திரமானவன் அல்லாஹ் ஒருவன்தான்? என்று சொல்லி மறுத்து விடுவாரே?

நிஜாம்: நான் நேரே சென்று நம்முடைய ஆத்மார்த்த லக்ஷ்யத்தை அவரிடம் சொல்லி இங்கு அழைத்து வர முயற்சிக்கிறேன். அந்தக் காலத்தில் நான் எவ்வளவு ஆசைப்பட்டேனே, அவ்வளவு தூரம் உண்மை பேச முடியவில்லை. எவ்வளவு துணிந்தேனே அவ்வளவு தான் உண்மை பேசினேன். (மெதுவாகச் சிரித்து) இப்பொழுது சற்று வயதாகிவிட்டது. துணிவு கொஞ்சம அதிகம் பெற்றிருக்கிறேன.

ஹஸன்தான்: நிஜாமுல்–முல்க்! தயவு செய்து விரைவில் செல்லுஙகள. உமர் கய்யாம் நம்மிடையே இருகக வேண்டுமென்ற ஆர்வத்தை இனியும் கட்டுப்படுத்தி வைக்க இயலவில்லை. வருஷங்களைத் தொடர்ந்து வரும் வருஷங்கள் நமமிடமிருந்து நாட்கள ஒவ்வொன றையும் கொஞ்சங் கொஞ்சமாகத் திருடிச் செல்லு கின்றன.

நிஜாம்: (சிரித்து) இறுதியில், நம்மிடமிருந்து அவை நம்மையே திருடிச் சென்றுவிடும்.

ஹஸன்தான்: நிஜாமுல்–முல்க்! இனியும தயவு செய்து காலங் கடத்தவேண்டாம.

நிஜாம்: இன்றே அவ்வன செய்கிறேன் ஸாஹிபா...ஆசை வசமான மனிதர், வேட்டைக்காரர் விரட்டும் முயலைப் போலத்தானே திரிய வேண்டி யிருக்கிறது!

ஹஸன்தான்: (உமர்கய்யாம் பாடலொன்றைப் படித்து) "புவியில் வந்தபோது நீ அழுதுகொண்டே வந்தாலும உலகம் சிரித்தது. ஆனல், முறையோடு வாழ்ந்தால், இறக்கும்போது நீ சிரித்துக்கொண்டே போவாய்; உலகம் உன் மறைவுக்காக அழும்"......எத்தகைய காரியம்!

**நிஜாம் :** ஏன்?...ஆண்டவனை அறிவது பற்றி, ஒரு சிறு உதாரணத்துடன் விளக்கியிருக்கிறரே, அதைத்தான சுலபமாக மறக்க இயலுமா?

**ஜைல்தானு :** அது என்ன நிஜாமுல்–முல்க்?

**நிஜாம் :** ஒரு தேன் சிட்டு வாழ்வது பற்றி மனிதனுக்கு என்ன தெரியும்? தன்னை ஆராயும் அவனைப் பற்றி அது என்ன நினைக்கிறது என்று ஆராய்ச்சியாளர் சொல்ல முடியுமா? கண் முன்னே பகட்டாக கவலையற்றுத் திரியும் கேவலம் ஒரு தேன் சிட்டு நிலையே இப்படியென்ருல், கண்ணுக்குப் புலனுகாத கடவுளைப் பற்றி மனிதன் எவ்வாறு அறிய முடியும்? இதற்காகத்தான் அவன் மத நூல்களையும் பழமையான சாத்திரங்களையும் சான்ருகக் கொள்ளுகிருன். . .

**ஜைல்தானு :** வாழ்க்கையின் திறவுகோல் எவ்வளவு அழகாக காட்டப்படுகிறது—மதங்களில் கட்டுப்பாடு; நூல்களில் அறிவு.

**நிஜாம் :** நாம் காணுத ஒன்றை நம்புவதுதான் பக்தி. நாம் காணுததை அந்தப் பக்தியின் பயனுகக் கண்டு விடுகிருேம...ஆனுல், ஒரு இசைப்புலவன் எவ்வளவு அற்புதமாகப் பாடினுலும், அதைக் கேட்டு இன்புறும் செவி இருந்தால்தான் அது சோபிக்கும் என்பதை அவர் அறியவில்லையே? .

**ஜைல்தானு :** நிஜாமுல்–முல்க் போதும்! சீக்கிரம் போங்கள். இந்த அறிவுக் கருவூலங்களை யெல்லாம் அவர் வாய் மூலமாகவே கேட்டு நான் அனுபவிக்க விரும்புகிறேன். தயவு செய்து அவரை இங்கு வரவழைக்க வேண்டிய ஏற்பாடுகளை உடனே செய்யுங்கள்.

**நிஜாம் :** தங்களைப் போலவே நானும் இந்தப் பெருமையில் பங்கு கொள்ள விரும்புகிறேன் பேகம் ஸாஹிபா!

ஈரானின் பெருமையை உயர்த்தும் அந்தக் கவிஞரை, அரிய நனபரை இங்கு கொண்டு வர ஆவன செய்கிறேன்.

[நிஜாமுல்-முல்க் அரண்மனைக்குள் போகிறார். உமர்கய்யாமின் பாடல்களை ஸுல்தாஞ மீண்டும் படிக்கிறார்]

## காட்சி 8

[உமர்கய்யாம், மாலை நேரத்தில், ஆனந்தமாகப் புல் தரையில் சாய்ந்து கொண்டிருக்கிறார். ஆடு மேய்ந்துகொண்டிருக்கிறது. அவர் இயற்றிய பாடலுக்கு அபிநயம் பிடித்து மெஹ்ருன்னிஸா ஆடுகிருள். "இல்லாத பொருளுக்காக ஏங்கிக் கிடக்காமல், இருக்கும் பொருளைப்பற்றிக் கவலை கொள்ளாமல் எல்லாம் வல்ல இறைவனை நாடி நின்றால், நிலைத்த சுகம் அவசியம் கிடைக்கும்" என்ற பொருளுக்கேற்ற அவள் நடனம் மிகவும் கவர்ச்சியாக இருக்கிறது]

**மெஹ் :** (நடனம் முடிந்ததும) எத்தகைய அர்த்த புஷ்டி நிறைந்த பாடல்!

**உமர் :** சபாஷ்! மெஹ்ருன்!...நீயும் நனருக நாட்டிய மாடினுய்!

**மெஹ் :** (சிரித்து) என் நாட்டியம தஙகளுக்குப் பிடித்திருந்ததென்று சொல்லுகிறீர்கள்?

**உமர் :** நீ மட்டும இசைந்தால், விதியையே வளைத்து, துன்பம் தொடரும இநத உலகைத் துண்டு துண்டாக உடைத்து, இன்பமே பெருகி வளர்ந்திடும் ஒரு அழகிய நந்தவனம் ஆக்கிவிடலாமே.

மெஹ் : (மெதுவாக நகைத்து) அதற்குத்தான் தங்கள் நண்பர் நிஜாமுல்-முல்கும் ஆட்களை அனுப்பி யிருந்தாரே.

உமர் : (சிரித்து) பாய் அஸ்கல்ப் !...பார்த்துக் கொண்டாயா இந்த உலகை ! மலரின் மென்மையும், சுகந்தமும வேண்டாம் ! அவைகளைப் பிழிந்து, கிடைக்கும் மணம்தான வேண்டியிருக்கிறது. ரோஜா மலரை முள்ளுககாக ஒதுக்கிவிட்டு, அதன் சாற்றை மாத்திரம் பன்னீர் மணமாக நுகர விருமபுகிறார்கள் ! ஹம் ! என்ன பேதமை !...புறப்படுவோமா ?...

[ஆடு கத்துகிறது]

மெஹ் : அஸ்கல்ப் தயார்தான்...(சிரித்து) நானும் தயாராக இருக்கிறேன.

[ஒரு சிறு மூட்டையுடன் புறப்படத் தயாராகிறாள்]

உமர் : நீயுமா ?

மெஹ் : நான் இல்லாமலா ? என்ன இப்படி அடிக்கடி கேட்கிறீர்கள ?

உமர் : ம...சரி வா...ஆனல், இதென்ன மூட்டை? எதற்கு?

மெஹ் : பிரயாணத்தினபோது ஒருவேளை உணவு !...

உமர் : (நகைத்து) பைத்தியக்காரப் பெண்ணே ! நம்மை நாமே உண்மையாக உணர்ந்துகொள்ள நம் உடைமையை அல்லவோ களைந்தெறிய வேண்டும். நம் பாப மூட்டைகளைச் சுமக்கவே நமக்கு சக்தி யில்லையே, இது வேறு ?

மெஹ் : (தயங்கி) தங்களுக்காக...

உமர் : பசியைக் கொடுக்கும் ஆண்டவன் உணவும் கொடுப்பான்...ம...பாய் அஸ்கல்ப் ! நட அப்பா போவோம.

[மூவரும் நடந்து போகின்றனர்]

**உமர் :** நாம் எங்கே போய்க்கொண்டிருக்கிறோம் தெரியுமா மெஹ்ருன் ?

**மெஹ் :** தங்கள் நண்பர் நிஜாமுல்-முல்க், ஆட்களை அனுப்பி யிருந்தாரே...

**உமர் :** (மெதுவாக நகைத்து) பைத்தியக்காரி ! உன்னைப் புத்திசாலி என்று நினைத்தேன் ; நீ இன்னும் முட்டா ளாகவே இருக்கிறாயே.

**மெஹ் :** (ஆச்சரியத்துடன்) இப்பொழுது நாம் அங்கே போகவில்லையா ?

**உமர் :** (மெதுவாகச் சிரித்து) பட்டினியாகச் சாகும் கொடு மையைவிட, முட்டாளாக இறப்பது அதைவிடக் கொடுமை...மெஹ்ருன் ! செல்வத்தைச் செல்வத்தில் வைத்திராதே ; அறிவில் வைத்திரு.

**மெஹ் :** அப்படியென்றால்...வாழ்நாள் முழுதும், நீங்கள் துன்பத்திலேயே உழல விரும்புகிறீர்களா ?

**உமர் :** துன்பம்தான் மனிதனின் உண்மையான உரைகல். இதை மறந்து விட்டாயே — ஆசையின் ஆழம் அதிகமாக அதிகமாக, அறிவின் தூரம் குறைகிறது.

**மெஹ் :** ஆனால், உங்கள் மேதை வெளிப்பட, செல்வமும் வேண்டிருக்கிறதே !...இந்த வறுமையில்...

**உமர் :** (நகைத்து) வறுமை!...செல்வந்தான் வறுமைக்குக் காரணம். குவியல் உயர உயர, குழி ஆழமாயக் கொண்டுதானே போகும் ! மெஹ்ருன் ! இதை இன்று முதல் நிச்சயமாக நம்பு. செல்வமென்பது, ஆன்மா எரிந்து மிகுந்த சாம்பல்தான்.

**மெஹ் :** (மெதுவாக) சிருஷ்டியெல்லாம் தயவு மிகுந்தது ; மனிதன் மாத்திரம் தயை இல்லாதவன்.

**உமர்:** அத்தகைய தயை நமக்குத் தேவையில்லை. ஆண்டவனின் அருளே வேண்டும்! "ஆண்டவனே தைரியத்தைக் கொடு" என்று துவாச் செய்தால், துன்பத்தில் தள்ளுவதுதான் அவன் அருளும் வழி. நாம் கடமையைச் செய்யவேண்டும்; செய்துவிட்டால் அதற்காக ஆண்டவனைத் துதிக்க வேண்டும். அவ்வளவுதான் நம் பணி!

**மெஹ்:** (உண்மையை உணர்ந்து, பணிவுடன்) என்னையும் மீறி, ஏதோ ஒரு கலக்கத்தில் தங்களுடன் வாதாடி விட்டேன. தயவுசெய்து என்னை மன்னித்துவிடுங்கள்.

**உமர்:** இதில் மன்னிப்பென்ன மெஹ்ருன்? தீச்செயல்கள குறித்து ஆண்டவன் முன் நாணுமல் மனிதன் முன் நாணக் கற்றுக் கொண்டால், மன்னிப்பு 'என்ற வார்த்தைக்கே இந்த உலகில் இடமில்லை. மஞ்சு துளி போல் தோன்றி, மலர் மணம போல மறையும இந்த வாழ்க்கையில் யார் யாரை மன்னிப்பது?

**மெஹ்:** மலரும் களையும் ஒரே மண்ணில் உண்டாயினும், களைதான், பிலுக்கித் திரிகிறது என்பதை நான் நிதர்சனமாகக் காட்டிவிட்டேன்.

**உமர்:** (சிரித்து) ஒவ்வொரு பறவைக்கும் ஆண்டவனே உணவளிக்கிறுன்; ஆனுல் அவன் அதைக் கூட்டிற்குள் போடுவதில்லையே.

**மெஹ்:** (வெட்கத்துடன்) முட்டாள, தன்னைத்தானே சீக்கிரத்தில் வெளிப்படுத்திக கொள்வான் என்பது, என் விஷயத்தில் எவ்வளவு உண்மையாயிற்று!

[பல நாட்கள் நடந்தே போகிருர்கள்]

**மெஹ்:** (உமர் புகழில் அக்கரைகொண்டு) நான் மீண்டும் மீண்டும் வற்புறுத்துகிறேனென்று, கோபம்கொள்ளக் கூடாது. ஓர் உயர்ந்த வைத்திய விடுதி, சிறந்த

கலாசாலை, சாஸ்திர ஆராய்ச்சி மண்டபம்—இவ்வளவும் நிர்மாணித்தால்...

உமர் : தொழுகை இடங்கள் கட்டக்கூடப் பொருள் தேவை என்று வகுத்து விட்டார்களே பேராசைப் பிடித்த மானிடர்கள்!

மெஹ் : ஏன், தாங்கள் விரும்பினால்......ஆண்டவனின் அருள்வாக்குடைய தங்கள் ஆற்றலுக்கு அப்பாற்பட்டது ஒன்று உண்டா?

உமர் : மெஹ்ருன் என் கனவில் வானவில்லுக்கோ, ஆகாயபாசத்துக்கோ இடமில்லை. சாதாரண குருடன் காணும் கனவு மற்றவர்களுக்கு இருட்டாக இருக்கலாம். ஆனால் எனக்கோ நித்தியமான வெளிச்சம்!

மெஹ் : உங்கள் ஞானபோதனையின் ஒளி, உலகத்தின் எல்லா மூலை முடுக்குகளிலும் பிரதிபலிக்கச் செய்தால் தாங்கள் ஈரானின் குருடரல்லர் என்பது தெளிவாகத் தெரியும். செல்வந்தர்களின் நிலையற்ற பொக்கிஷம், உங்கள் நிரந்தர பொக்கிஷத்தின் முன் எந்த மூலை? உலகின் சிறந்த இடத்தைத் தங்களால்தான் நிர்மாணிக்க இயலும்.

உமர் : உலகின் சிறந்த இடம் கபடமற்ற குழந்தைகள் நிறைந்த இல்லந்தானே? குழந்தைகளை வாரியணைத்து முத்தமிடும் காட்சி இருக்கிறதே, அதைவிடத் தூய்மையான காட்சியா? இந்த இல்லத்தில், அடுப்பங்கரையின் வெதுவெதுப்பில் தாலாட்டையும் பிரார்த்தனையையும் ஒருங்கே கேட்கலாம்.

[மெஹ்ருன் திடீரென்று அப்பால் போகிருள்]

மெஹ் : (போய்க்கொண்டே) இனியும், தங்களுடைய தத்துவங்களை கேட்டு நான் வாளாவிருக்க மாட்டேன்.

**உமர் :** மெஹ்றுன்!...மெஹறுன்! எங்கு போகிறாய்?

**மெஹ் :** (இன்னும் தூரத்தில்) தங்களிடமுள்ள வான சாஸ்திர ஞானம்,குடத்திலிட்டவிளக்காக இருக்கக்கூடாது. தங்களுடைய ஒப்புயர்வற்ற வைத்தியத் திறன் அடுத்துவரும் சந்ததியாருக்கும் பயன்பட வேண்டும். (போய்க்கொண்டே) உங்களால்தான் சமுதாயத்தின் அறிவையும் போக்கையும் மாற்றி அமைத்து உயர்த்த இயலும்!...நீங்கள் உலகம் உய்யப் பிறந்தவர்.

**உமர் :** ஹூம்...என்மேல் உள்ள அன்புப் பெருக்கால் ஏதேதோ உளறி விட்டு ஓடிவிட்டாள்.

[மெஹ்றுன் நிஜாமுல்-முல்க் அரண்மனை நோக்கி ஓடுகிறாள்]

## காட்சி 9

[அரசரின் கடமையை வலியுறுத்தும் உமரின் பாடலொன்றைப் பாடியவாறு மெஹ்றுன் அரண்மனை முன்னால் போகிறாள். இந்தப் பாடல் ஸுல்தானா செவிகளில் விழுகிறது]

**ஸுல்தானா :** யாரது இந்தப் பாட்டைப் பாடுவது? எங்கள் உமரின் பாடலல்லவா? ஸிராஜ்!... இந்தப் பாட்டைப் பாடிச் செல்லும் அந்தப் பெண்ணை என் சமுகத்துக்கு அழைத்து வா.

[ஸிராஜ் என்ற பணிப்பெண் மெஹ்றுனை அழைத்து வருகிறாள்]

**ஸிராஜ் :** இதோ வந்திருக்கிறார்கள், பேகம் ஸாஹிபா!

**ஸுல்தானா :** பெண்ணே, நீ யார்?...நிஜாமுல் - முல்க்! இந்தப் பெண் யாரென்று உங்களுக்குத் தெரிகிறதா?

**மெஹ்ர் :** நான் உமர்கய்யாம் அவர்களின அடிமைகளில் ஒருத்தி—மெஹ்ருன் !

**[இதைக்கேட்ட நிஜாமுல் - முல்க் ஆவலுடன் வருகிருர்]**

**நிஜாம் :** என்ன ? ஈரானின ஒப்பற்ற கவிஞரான என் நண்பர்—ஹக்கீம் கியாஸுத்தின் அபுல் ப(த்)தஹ் உமர் பின இப்ராஹீம அல் கய்யாம் அவர்களின் தோழியா நீ ?

**மெஹ்ர் :** ஆம்!......அவருடைய ஆத்யந்த நண்பர் என்ற வகையில், தங்களைக் கண்டு போகவே வந்தேன்.

**நிஜாம் :** என் வாழ்வில் இனறு எத்தகைய நந்நாள் ! என் னைக் கண்டு வருமபடி அனுப்பினுரா ? எனனை உனனு டன் அழைத்துப் போவாயா ?

**ஸுல்தானு :** (மகிழ்வுடன்) அவரை உபசரிக்கும பாக்கியம் நமக்குக் கிடைக்கும எனறு நான சொல்லவில்லை ?

**மெஹ்ர் :** இத்தகைய ஒப்பற்ற மகான், நம்மிடம் தோன்றி இருப்பது நமது பாக்கியமல்லவா ! அவர் புகழ், உலகின் எல்லாத் திக்குகளிலும் பரவச் செய்ய வேண்டியது நமது கடமை அல்லவா ?

**ஸுல்தானு :** மெஹர் !...உனது அறிவை மெச்சுகிறேன். இதற்கு நாங்கள் என்ன உதவி செய்ய முடியும் ? நாங்கள் அனுப்பியிருந்த தூதுவர்களிடம், உமர்கய் யாம ஒன்றும் பிடிதராமல் பேசி அனுப்பிவிட்டாரே... அவருக்கு உதவி செய்ய எங்களுடைய இந்த ஸல்ஜூக் அரசாங்கமே காத்து நிற்கிறது என்பதை அவருக்கு எப்படித் தெரியப்படுத்துவது எனறல்லவோ தெரியா மல் திண்டாடிக் கொண்டிருக்கிறும.

**மெஹ்ர் :** மின்மினி பறக்கும போதுதான் பிரகாசிக்கும்; அதுபோல்தானே மனமும். ஓய்வென்றுல் உடனே

இருள் சூழ்ந்துவிடாதா?...இதையறியாமல் அந்தக் கவிஞர் எல்லாவற்றையும் புறக்கணிக்கிறார்.

நிஜாம் : ஆனால், சிற்பி சிலையை வாங்கமாட்டான்.

ஸுல்தானு : வேண்டாம்! ஆனால், உயர்ந்த மாடமாளிகைகளும பூமியிலிருந்துதான் எழும்ப வேண்டும் என்பதை யாவது ஞாபகத்தில் கொள்ள வேண்டுமல்லவா?

மெஹ்ர : 'வாழ்க்கையில் கசப்பை அறியாதவர்கள் இன்பத்தை அனுபவிக்க முடியாது' என்று தர்க்கம் பேசுகிறவரிடம நான என்ன வாதாட முடியும்? இருந்தாலும், இவருடைய அற்புதமான திறமையை நான் நன்கு அறிவேன.

ஸுல்தானு : ஆம்...அவருடைய அரிய மேதை எதிரொலிக்கும பிரமமாண்டமான கலாசாலையை நாம நிர்மாணிக்க வேண்டும்.

நிஜாம் : அவருடைய பரந்த வைத்திய ஞானத்தை உலகுக்குப் பறைசாற்ற, நோயாளிகளுக்குப் பயன்படுத்த, ஒரு உயர்ந்த வைத்திய விடுதியையும அமைக்க வேண்டும்.

மெஹ்ர : அவருடைய நுண்ணிய வானிலை ஆராய்ச்சி அறிவை உலகுக்குப் பயன்படுத்தும் வகையில் சிறந்த ஆராய்ச்சி மண்டபம் ஒன்றும் கட்ட வேண்டும்.

ஸுல்தானு : மிகவும் சிறந்த ஏற்பாடு...நானும் சில காலம் அவருடைய சிஷ்யையாகவே இருந்திருக்கிறேன். ஆனால், அவருடைய அறிவைப் பகிர்ந்து கொள்ளும் அரிய பாக்கியம் எனக்குக்கிடைக்கவில்லை. வேறு எந்த நற பரிசுக்கும் நான் தகுதியில்லை என்று கண்டு கொண்ட பின்னர்தான் ஆண்டவன் நிறைய செல்வத்தை மாத்திரம் கொடுத்தாரோ என்னவோ?...... இதற்குப் பிராயச்சித்தமாக, இந்தச் செல்வத்தின் ஒரு பகுதியை இந் நற்பணியில் செலவிட நான் விரும்பு

கிறேன். ஷாஹின்ஷா அவர்களும் இதற்கு முழு மனதோடு அனுமதியளித்துவிட்டார்.

**மெஹ்:** தாங்கள் இவ்வளவு உற்சாகமளிக்கும் போது நாங்களும் எங்களால் இயன்ற வரை அவசியம் செய்கிறோம்... தங்களுடைய பெரிய மனம்...

**ஜைல்தாஜு:** (சிரித்து) மெஹர்... தயவு செய்து என்னைப் புகழாதே... புகழ்ச்சி ஒரு பெரிய பூதக் கண்ணாடி.. தன் சொரூபத்தை பெரிதாகக் காட்டும் வன்மை அதற்கு உண்டு.

**நிஜாம்:** பேகம் ஸாஹிபா!... நானும் இந்த மெஹருடன் போகிறேன். என் நண்பர் உமர்கய்யாமைக் கண்டு, அவர் தமக்காக இல்லையென்றாலும், நாட்டு மக்களின் நலனுக்காக இத்தகைய சேவை செய்யத்தான் வேண்டும் என்று வற்புறுத்திச் சொல்லி அழைத்து வருகிறேன்.

**ஜைல்தாஜு:** ஆண்டவனும் அவசியம் நமக்கு உதவுவான். மனிதனுடைய இதயம் ஊமையாக இருந்தாலன்றி ஆண்டவன் ஒரு நாளும் செவிடாக இருந்ததில்லை.

**மெஹ்:** முட்கள் நிறைந்த காமபிலே மலரும் மென்மையான ரோஜா மலரைப் போல, பொய்யின் மௌனத்தில் பிறப்பதுதானே உண்மை.

**ஜைல்தாஜு:** உமர்கய்யாம் அவசியம் இதற்கு உடன்படுவார் என்று ஏதோ ஓர் நம்பிக்கை என்னுள் சொல்லுகிறது

**மெஹ்:** (சிரித்து) அவர் அகராதியில் நம்பிக்கை என்றால் என்ன தெரியுமா பேகம் ஸாஹிபா?

**ஜைல்தாஜு:** என்ன மெஹர்?

**மெஹ்:** விழித்திருக்கும் நிலையில் காணும் கனவுதான் நம்பிக்கை!

**ஸால்தானு :** *ஓடும் நீர், மனிதனின் வாழ்க்கைப் பயணம், இரண்டுக்கும் ஒரே முடிவு என்று சொல்லுவார்கள். ஆனால், உமர்கய்யாமின் வாழ்க்கை அப்படியல்ல. அவருடைய அறிவு வெள்ளம் ஈரானையே செழுமைப் படுத்த பயன்படுமே யன்றி விழலுக்கிறைத்த நீராக மாற நான் ஒருபோதும் சம்மதிக்க மாட்டேன். நிஜாமுல்-முல்க்! நீங்கள் தயவு செய்து மெஹ்ருன்னிஸா வுடன் சென்று, மக்களின் நலனுக்காக, நம்முடைய ஏற்பாட்டுக்கு அவரை இணங்கச் சொல்லுங்கள்.*

**நிஜாம் :** *தூயமையா யிருந்தால் அவசியம் நேர்மை உண்டு பேகம் ஸாஹிபா!...இதோ சென்று வெற்றியுடன் திரும்புகிறேன்.*

## காட்சி 10

**[நிஜாமுல்-முல்க் உமரைத் தேடி அவரிருக்கும் இடம் போகிறார். தம்முடைய பால்யகால நண்பர் நிஜாமுல்-முல்கைக் கண்டதும் உமர் ஆனந்தத்தால் திகைத்து நிற்கிறார்]**

**நிஜாம் :** ( *மிகவும் ஆர்வத்துடன்* ) *உமர்கய்யாம்!...என் அரிய உமர்!...*

**உமர் :** *யார்? யாரது, என் நண்பரா ?...(சமீபத்தில் வந்து) என் அரிய சிநேகிதரா !*

**[இருவரும் ஓடிவந்து இறுக அணைத்துக் கொள்ளுகின்றனர்]**

**நிஜாம் :** (*அணைத்துக்கொண்டே உணர்ச்சியுடன்*)*உமர்!...*

**உமர் :** நிஜாமுல்-முல்க்! தங்களுடைய முதுமையிலும் என்பால் எத்தனை அன்பு! உங்களைப் போல அரிய நண்பர் எனக்கு வேறு யார்?

**நிஜாம் :** எத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு ஓர் உண்மை யான நண்பரால் வாய நிறைய வாழ்த்தப்படுகிறேன்! இந்த நாட்டின் வஸீர் பதவி என்னைத் தனியே ஒதுக்கி வைத்திருக்கிறது.

**உமர் :** நிஜாமுல்-முல்க்! நம்மிடையே எவ்வளவு தூர இடைவெளி இருந்தாலென்ன?... நம மானஙீக அனைபைப் பிளக்க முடியுமா? வானம வாய திறக்கா விட்டாலும, வழி காட்டுவதில்லையா ?

**நிஜாம் :** உமர்!...இனியும் உஙகளைவிட்டு நான் பிரிந்து இருக்க விரும்ப மாட்டேன். உங்களுடைய புகழ் உலகம் முழுதும பரவ வேணடுமெனபது எனனுடைய, இந் நாட்டு ஸுல்தானுடைய, பேகம ஸாஹிபாவுடைய, மங் களுடைய தணிக்க முடியாத ஆவல். உஙகளுக்கு உரித்தான புகழை...

**உமர் :** (சிரித்து) புகழ்!...உழைப்பவன புதை குழியி லிருந்து நம்பிக்கை ஊர்வலம வருகிறதல்லவா, அது தானே புகழ்!

**நிஜாம் :** இல்லை உமர்!...உங்களைவிடச் சிறந்த வைத்திய, வானசாஸ்திர அறிவு உளளவர் யாருமில்லை எனபதே எங்களுடையஅசைகக முடியாத நமபிக்கை.

**உமர் :** அறிவுள்ள வைத்தியர் யார் தெரியுமா?...'தமமை விடப் பெரிய வைத்தியருக்கு வழி விடுவதே தம் கடமை' என்று உணர்கினறவர்தான! இயற்கைதான் அந்தப்பெரிய வைத்தியர்.

**நிஜாம் :** இல்லை உமர், நீஙகள என்ன சொன்னாலும நான் செவி சாய்ககமாட்டேன. எறுமபின் விருப்பம் கூட

கடவுள் காதுக்கு எட்டிவிடுகிறது. என்னுடைய விருப்பத்தை ஆண்டவன் அவசியம் சாத்தியமாக்குவான்.

உமர் : நிஜாமுல்-முல்க! என்னை எவ்வளவு சிறந்த மருத்துவனென்று நீங்கள் கருதுகிறீர்கள்? ஹூம்... உலகம் ஒரு கிழவி—முலாம் பூசிய காசைத்தான் தங்க நாணயமாகக் கருதுகிறது. அப்படிக் கருதிக் கருதி ஏமாந்து போய், கடைசியில் செப்பு நாணயம் தவிர வேறு எதையும் நம்புவதில்லை.

நிஜாம் : என் நண்பர் உமர்கய்யாம் வெறும் செப்பு நாணயமா? இல்லவே இல்லை··· இதை நான் ஒருக்காலும் ஒப்புக் கொள்ளவே மாட்டேன்.

உமர் : அப்படி யென்றால் நீங்கள் என்னைத் தான் திணணமாகச் சொல்லுகிறீர்கள்? என்னிடம் ஏதும் தகுதியிருந்தால் அதை விற்க வேண்டும் என்கிறீர்களா?

நிஜாம் : ஏன விற்க வேண்டும்?...நீங்கள் ஓர் உயர்ந்த மனிதர். எது நியாயம் என்று உங்களுக்குத் தெரியும்.

உமர் : ஆனால் தாழ்ந்த மனிதருக்கு எது விற்கும் என்றல்லவோ தெரிகிறது.

நிஜாம் : (சிரித்து) அப்படியென்றால், தாங்கள் விரும்பாத இடத்தில் நான் தங்களைத் தள்ளிவிட முயற்சிக்கிறேன் என்று சொல்லுகிறீர்களா?

உமர் : நிஜாமுல்-முல்க்! என்னை யாருமே, எப்பொழுதுமே தள்ளமுடியாது. ஒரு மனிதன் பல தடவை விழலாம்; இதனால் அவன் தோற்றுவிட்டான் என்று பொருளல்ல. ஆனால், என்று அவன் தன்னை யாரோ தள்ளிவிடுகிறார்கள் என்று எண்ண ஆரம்பிக்கிறானோ, அந்தக் கணமே அவன் தோல்வி அடைகிறான்!

(புன்முறுவலுடன்) அது சரி உமர்கய்யாம்...நாம் எப்பொழுது புறப்படலாம?

**உமர் :** (சிரித்து) நான் வருவதாக ஒப்புக் கொண்டதாகப் பேசுகிறீர்களே!

**நிஜாம் :** உங்களை வரவேற்க நாங்கள் எல்லாரும் எப்படித் துடித்துக் கொண்டிருக்கிறோம் என்பதை அறிந்தால், நீங்கள் இப்படிச் சொல்லமாட்டீர்கள். உங்களை உடன் அழைத்துச் செல்லும் பெரும் பேற்றை எனக்கு நீங்கள் அளிக்க மாட்டீர்களா?

**உமர் :** சரி வருகிறேன். இடியும் குமுறலும் நிறைந்த இந்த உலகத்திலிருந்து நான் தப்பிவிட நினைத்தால், அது அவ்வளவு சுலபமாக முடியுமா?...... (சிரித்து) இடி இடிக்கும்போது வானம் சபதிக்காவிட்டால், குடியானவன் கூட ஆண்டவனைப் பற்றிச் சிந்திப்பதில்லை.

**நிஜாம் :** ஆஹா!...குதூகலத்தால் என் மனம் எவ்வளவு நிறைந்து பூரிக்கிறது!

**உமர் :** நான் கண்டுவரும் கனவு அங்குள்ள சூழ்நிலையில் சிதறாமல் இருந்தால், அதுவே எனக்குப் போதும். வெறும் அர்த்தமற்ற ஆடம்பரப் பாதையில் போவதைவிட, ஆண்டவனுக்கும் சமூகத்துக்கும் தொண்டு செய்ய நான் கொண்டிருக்கும் கனவு சிதைந்து விடாதே?

**நிஜாம் :** உமர்! இதென்ன வார்த்தைகள்!... தாங்கள் கண்டுவரும் இக்கனவு நனவாக வேண்டுமென்று தினம் ஐந்து வேளையும் ஆண்டவனிடம் துஆக் கேட்டு வருகிறோம்.

**உமர் :** (சிரித்து) ஏழையின் கனவு தூக்கத்தில்தான் பலிக்கிறது.

யார ஏழை?

**உமர் :** நிஜாமுல்-முல்க்! உங்களுக்குத் தெரியாது! மன்னர்களும் மந்திரிகளும என்றும ஏழையாக இருந்த தில்லை. ஏழைமையைப்பற்றி அவர்களுக்குத் தெரியாது.

**நிஜாம் :** உமர்! என்னைவிட உங்களை நன்ருக அறிந்தவர் கள யாருமில்லை. ஏதும சொல்லி, இத்தனை நாட்கள் நான கொண்டிருந்த என் பராமுகத்திற்காக என மன தை இன்னும் புண்படுத்தாதீர்கள். கனவு, தூங்கும் நேரத்தில் நாடகமாக இருக்கலாம. ஆனல் விழித் திருககும நேரத்தின் கனவுதானே நாடகம்! என் வாழக்கை நாடகத்தில் உங்களுக்கு இந்தச் சிறிய தொணடு செய்ய முடிந்ததை என அரிய பாக்கியமாகக் கருதுகிறேன். இநத இடத்தில் ஏழைகளுக்காக ஒரு கலாசாலையும் ஒரு வைத்திய விடுதியும நிர்மாணித்துத் தாங்கள சேவை செய்ய வேண்டும.

**உமர் :** இது என்ன நிஜாமுல்-முல்க்?...ராஜ்ய பதவியில் என்னை ஒட்டிக கொள்ளச் சொல்லுகிறீர்களா?

**நிஜாம் :** தயவு செய்து என்னை இன்னும் பாவியாக்கா தீர்கள. ஒருவன் மன்னனுக வாழ்ந்தாலும், அவன் மனிதனுகத்தான் இறக்க வேண்டுமெனபதை நான் நன்ருக அறிவேன்; தாங்களும் அறிந்ததே. தாங்கள் அவசியம் வந்துதானுக வேண்டும்.

**உமர் :** நான் இப்படிச் சில நாட்கள கழிக்க வேண்டுமென ஆண்டவன் விரும்பினுல், அதை மறுக்க நான் யார்? என் வழியில் நானே தடைப்பட்டு இங்கு நின்றுவிட்ட எனக்கு, வழியிலுள்ள சகலமும் தடை செய்து கொண்டு நிற்பதாகத் தானே தோன்றும்? உங்கள் விருப்பம்போல் ஆகட்டும்!

## காட்சி 11

[உமர்கய்யாமை அரசாங்கத்திற்கு அழைத்துக் கொண்டு போய்விடுகிறார்கள். மக்களின் நன்மைக்காக அவர் அநேக தொண்டுகளைச் செய்கிறார். அவர் நிர்மாணித்த வைத்திய விடுதிக்கு நோயாளிகள் நூற்றுக்கணக்காக வந்து, தீராத நோயை எல்லாம் குணப்படுத்திக் கொண்டு போகிறார்கள் அத்தகையோருள் சிறுமி ஒருத்தி ஹஸீனா. அவளுடைய குறும்புப்பேச்சு உமருக்கு மிகவும்இஷ்டம். "அற்புதமான பானைகளை எல்லாம் செய்தாலும், திரும்பவும் மண்ணில் படுப்பதற்கே நாங்கள் சென்று விடுவோம்!" என்று பானைகள் குறும்பாகச் சொல்லுகின்றன என்ற வகையில் ஒரு பாடலை இயற்றி உமர் பாடிக்கொண்டிருக்கும்போது ஹஸீனா வருகிறாள்]

**ஹஸீனா :** *தாதா!—இந்த வைத்திய விடுதிக்கு வந்ததிலிருந்து, குணமானதிலிருந்து, நானும் பானை சட்டிகள் செய்கிறேனே, ஒன்றாவது என்னை இப்படிக் கேட்கவில்லையே...*

[உமர் திடீரென்று நக்ஷத்திரங்களைக் கவனிக்கிறார்]

**ஹஸீனா :** *என்ன தாதா நான் கேட்கிறேன், நீங்கள் நக்ஷத்திரங்களின் கணக்கு எடுக்கிறீர்கள?*

**உமர் :** *ஆம் ஹஸீனா...உலகில் பானை சட்டிகளில்தான் எத்தனை விதம், எத்தனை வடிவம், எத்தனை நிறம்; தரையில் அமர்ந்திருப்பவை சில...சுவற்றில் சாய்ந்திருப்பவை சில... களிமண்கொண்டு ஆண்டவன் விளையாடும் விளையாட்டு!*

**ஹஸீனா :** *களிமண்ணால், பல உருவத்தில் நம்மைப் பிழைக்க விடுகிறான் என்றால், உலகமே களிமண்தானா?*

**உமர் :** *ஆம்......ஆனால், நமக்கு அறிவு வேண்டாம்!... இந்த மண் உலகின் சிறுமையை விட்டு,*

நிர்மலமாகக் காற்றின் மேல் பாயாமல், கரி மண் குடிசையில் குறுகி வெட்டியாக வாழ இவர்களுக்கு வெட்கமாக இல்லையே ?

**ஹஸீனு :** ஏன் ? பாம்பு கூட மண்புற்றில் இருப்பதாலா ?

**உமர் :** இது அந்தக் குயவனின் அறியாமை. அந்தக் குயவனை நான மன்னித்துத்தான், இந்தக் குடம் செய்யும பாவத்தையும் அவன் மன்னிக்க வேண்டு மென்று சொல்லுகிறேன்.

**ஹஸீனு :** தாதா !...எனக்கொரு சந்தேகம் ?

**உமர் :** என்னம்மா ?

**ஹஸீனு :** சதா, குயவன் குடம் என்கிறீர்களே தாதா குயவன் யார் ? குடம யார் ?

**உமர் :** இந்தக் கேள்வியின் விடையைத்தானம்மா என் வாழ்நாள் முழுவதும் தேடிவருகிறேன். பதில் கிடைக்கவில்லையே...

**ஹஸீனு :** ஆண்டவனை வழிபடும் இடத்திலுமா ?

**உமர் :** அர்த்தமற்ற ஆடம்பரமும், அநாவசிய படாடோப மும நிறைந்திருந்தால், அதுதான் அந்தக் குயவன் தூங்கும இடம்!...முழுமனத்துடன் உலக பந்தத்தைக் களைத்தெறிந்து ஈடுபட்டால், எந்தஇடமாக இருந்தால் என்ன ? ஆனல், நோயும் நொடியும் மலிந்த இந்த உலகில், அது போல பரிசுத்தமான இடமிருக் கிறதா ?

**ஹஸீனு :** நோயும் நொடியுமா ? இந்த வைத்திய விடுதிக்கு வந்ததும், நோயாளிகள் அனைவரும் குணமடைந்து விடுகிறார்களே ! அதிருக்கட்டும் தாதா, இந்த உலகில் நோயே இல்லாமல் இருக்கக் கூடாதா ?

**உமர் :** நோய் என்பது என்னம்மா ? வறுமையின் விலை! போகத்துக்குத் தண்டனை !

[நக்ஷத்திரங்களை மிகவும் கூர்ந்து நோக்குகிருர்]

**உமர் :** (திடீரென்று) ஆ!...அதென்ன, நக்ஷத்திரங்களின் இத்தகைய சேர்க்கை!...தேசத்துக்கு என்ன ஆபத்து காத்துக் கொண்டிருக்கிறதோ ...... ஹஸீனு! நீ சாப்பிடப்போ. மெஹ்ருன் காத்திருப்பாள். நான் நக்ஷத்திரங்களின் இந்த நிலையைப் பற்றி நன்ருகக் கவனித்து விட்டு வருகிறேன்.

**ஹஸீனு :** (சிரித்து) போங்கள் தாதா! சதா வானத்தை அண்ணாந்து பார்த்து கணக்கெடுக்கிறதுதான் உங்கள்வேலை! (போய்க்கொண்டே) தாதா, நீங்கள் சொல்லுவது எனக்குச் சரியாகப் பிடிபடாவிட்டாலும் உங்களைக் கண்டால் ஏனே பிடிக்கிறது!

[குதிரை 'தடதட'வென ஓடிவந்து நிற்கிறது]

**ஹஸீனு :** தாதா!...தாதா!...இதோ பாருங்கள்.

**உமர் :** என்ன ஹஸீனு...?...யாரது குதிரை மீது?...என்ன முதுகில்? அம்பா?

[குதிரையின் மீதிருந்தவர் மயங்கி கீழே விழுகிருர்]

**ஹஸீனு :** ஆ!...மயக்கமாக விழுந்து விட்டாரே!

**உமர் :** மெஹ்ருன எங்கே? (உரக்க) மெஹ்ருன! (ஹஸீனுவைப் பார்த்து) ஹஸீனு, மெஹ்ருனைக் கூப்பிடம்மா?

**மெஹ் :** (தூரத்தில்) இதோ...இந்த நோயாளிக்கு மூலிகையின் சாற்றைப் பருகக் கொடுத்துவிட்டு இதோ வந்துவிடுகிறேன்.

**உமர் :** அதைவிட அவசரமாகக் கவனிக்க வேண்டிய ஒரு நோயாளி வந்திருக்கிருர். இங்கு வந்து பார்.

**மெஹ் :** (வந்துகொண்டே) ஆ!......யாரது?......முதுகில் பலமான காயமாயிருக்கும் போல் காண்கிறதே.

ஹஸீனு: யாரோ பதுங்கி யிருந்து இவரைத் 'தாக்கி இருக்கவேண்டும், என்று தோன்றுகிறது பூஜான்.

உமர்: வெறும் பேச்சுக்கு இப்போது நேரமில்லை. ரண சிகிச்சைக்கான மருந்துகளை உடனே கொண்டுவா.

[மெஹ்ருன் மருந்து கொண்டு வரப்போகிருள்]

ஹஸீனு: (மெதுவாக) ஏன் தாதா, இப்படி ஒரு நிரபராதியை வஞ்சகமாகத் தாக்கும் அந்தப் பலவானைக்கூட நாம் எதிர்க்கக் கூடாதா?

உமர்: (மெதுவாக நகைத்து) பலவானைப் பலமிழக்கச் செய்வதால், பலஹீனனை நாம் பலம் பெறச் செய்ய முடியாதம்மா!

[மெஹ்ருன் மருந்துடன் வருகிருள்]

மெஹ்: (வந்து கொண்டே) இதோ தாங்கள் கேட்ட மருந்து.

உமர்: மெஹ்ருன்! இந்த மனிதர் உயிருக்குப் பயந்து ஓடி வந்து இப்போது உயிருக்காகத் திண்டாடிக்கொண்டிருக்கிருர். சற்று ஜாக்கிரதையாகப் பிடி.

[இருவருமாக அந்த நோயாளியை உள்ளே கொண்டுபோகிருர்கள். அவருக்கு வேண்டிய கட்டுகளைப் போட்டு, படுக்கையில் கிடத்துகிருர்கள்]

ஹஸீனு: ஏன் தாதா...யாரென்று அறிந்து கொள்ளாமல் கூட எல்லோருக்கும் உதவுகிறீர்களே...

உமர்: ஹஸீனு!...இப்படி நினைக்கக் கூடாதம்மா. ஒரே ஒரு உதவியைச் செய்து ஒரே ஒரு உள்ளத்திற்கு ஆறுதலைக் கொடுப்பது, ஆண்டவனுடைய பிரார்த்தனையில் ஆயிரம் தடவை தலைவணங்குவதை விடச் சிறந்ததம்மா.

**ஹஸீனு:** இவர்கள் குணமானதும் பணத்தையும் அள்ளிக் கொடுத்து விடுகிறீர்கள்......கடனென்று கூடக் கொடுப்பதில்லை.

**உமர்:** (சிரித்து) கடன் கொடுப்பதைவிட தானம் கொடுப்பது மேல். இரண்டிலும் ஒரே நஷ்டமதான்.

**மெஹ்ற:** இரவு பகல் என்று பாராமல் சதா நோயாளிகளுக்காக இப்படி உழைக்கிறீர்களே, உங்களுக்குச் சற்றும் அலுப்பே தட்டுவதில்லையா?

**உமர்:** இரு மெஹ்ற, இந்தக் கட்டைப் போட்டுவிட்டு வந்து சொல்லுகிறேன்.

**[இன்னொரு நோயாளிக்கு வேண்டிய கட்டுகளைக் கட்டிவிட்டு, குதிரையில் வந்த வீரனின் நாடியைப் பிடித்துப் பார்க்கிறார்]**

**உமர்:** இந்த நோயாளி நாளை பகல்வரை நிம்மதியாகத் தூங்கவேண்டும். வாருங்கள் அப்பால் போகலாம்.

**ஹஸீனு:** (சிரித்து) பூஜான் கேட்ட கேள்விக்கு இன்னும் பதில் சொல்லவில்லையே.

**உமர்:** (நகைத்து) என்ன கேள்வி அது, ஹஸீனு? கேள்வியையே மறந்து விட்டேனே.

**ஹஸீனு:** சதா உழைப்பதால் உங்களுக்கு அலுப்பில்லையா என்று கேட்டார்கள். உங்களையே பிழிந்து கொள்ளுகிறீர்களே?

**உமர்:** ஒரு துளி பன்னீருக்காக எத்தனை ஆயிரம் ரோஜா மலர்கள் பிழியப்படுகின்றன? மலரை விடவா நான் தியாகம் செய்கிறேன்?...ஆனால், ஹஸீனு இதை அறிந்துகொள். உடல் உழைக்காமல் உண்பது

சமூகத்தின் ஒரு உறுப்பு அழுகுவதற்குச் சமானம். நாளடைவில் அதனால் சமூகமே அழிந்துவிடும்.

மெஹ்ற : ஹஸீனா...வா நாம் சென்று மற்ற நோயாளிகளைக் கவனிப்போம். இவர் சற்று அயர்ந்து தூங்கட்டும். (போய்க்கொண்டே) இந்தப் பன்னீர் அருகில் இருப்பதால்தான, நாம கூட உழைப்பையும் உழைப்பின் மணத்தையும தெரிந்துகொளள முடிகிறது!

## காட்சி 12

**[மூன்று நாட்கள் கழிகின்றன; குதிரை வீரன் மிகவும் விரைவில் குணமடைந்து வருகிறான்]**

டமர் : மெஹ்றுன்! மூன்றும நாள் வந்த ஆசாமிக்கு எப்படி இருக்கிறது?

மெஹ்ற : எனக்கே எல்லையற்ற வியப்பாக இருக்கிறதே! குற்றுயிரும குலையுயிருமாக வந்த ஆசாமிதானா என்று மலைப்புத் தட்டுகிறது. அவ்வளவு சுகமடைந்து காணப்படுகிறார்!

டமர் : எல்லாம் அல்லாஹ்வின் அருள்.

மெஹ்ற : உங்களைப் பற்றி நோயாளி எவ்வளவு நல்ல அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் தெரியுமா?

டமர் : மெஹர்...நாம முக்கியமாகக் கவனிக்க வேண்டிய நல்ல அபிப்பிராயம ஒன்று உண்டு: அது நம முடையது.

மெஹ்ற : (சிரிக்கிறாள்)

**[ஒரு குதிரை வந்து நிற்கிறது; குதிரையிலிருந்து கியாஸ்பேக் இறங்குகிறான்]**

**கியாஸ் :** (வந்து கொண்டே சிரித்தவாறு) ஓஹோ...உமர்! மெஹர்!—நீங்கள் இருவருமா?

**உமர் :** யாரது? கியாஸ பேக்கா?...

**கியாஸ் :** ஏன, ஆச்சரியமாக இருக்கிறதா? உங்கள் காதல் வாழ்வு இன்னும முற்றுப் பெறுததை நான் கண்டுவிட்டேன என்று வெட்கமா? சைத்தான் தன்னால் முடியாது என்று நினைக்கும் காரியத்தை முடிக்க, பெண் என்ற தூதுவை அனுப்புகிறன் என்பது எவ்வளவு உண்மை. ஆஹா!...காதல் என்றாலும் இத்தகைய காதலை யல்லவோ அனுபவிக்கவேண்டும! உங்களைப் போன்ற காதலர்களைக் காண்பதரிது! மானம் வெட்கம் விட்டு அனுபவிக்க வேண்டும்.

**உமர் :** காதல்...ஹூம!...உன்னைப் போன்ற ஆண்களுக்கு காதல் தர்க்கமாக இருக்கலாம. ஒருசில பெண்களுக்கு வேண்டுமானால் அது மயக்கமாக மாறலாம. ஆனால் ஒரு கவிஞனுக்கு அது முடிவில்லாக் கவிதை.

**கியாஸ் :** கவிதை! ஹூம்! எல்லாம பணத்தில் அடக்கம்! கேவலம பணத்துக்காக நீர் மெஹ்ருனை மணக்கவும் துணிந்தீர் என்பதைப் பல வருஷங்களுக்கு முன்பே அறிவேன.

**உமர் :** பணத்துக்காக ஒருத்தியை மணப்பவன் மூடன். அதைவிட மலிவாகக் கடன் வாங்கிவிடலாம.

**கியாஸ் :** அர்த்தமில்லாத உன உளறலைக் கேட்கப் பொழுதில்லை...இரத்தக் கறைகளுடன் இரண்டு தினங்களுக்கு முன் இஙகு ஒருவன் வந்ததுண்டா?

**மெஹ்ர் :** உன்னைப் போன்றவர்கள் உலகில் உள்ளவரை, இரத்தக் கறைகளுக்கா பஞ்சம்?

**கியாஸ் :** நிறுத்து, அம்புக் காயத்தோடு ஒருவன் வந்தானே, அவன் எங்கே?

**உமர் :** தற்சமயம் மயக்கம் தீர்ந்து நல்லபடியாக இருக்கிருர்.

**கியாஸ் :** ஓ!...நீங்கள் உயிர்ப்பிச்சை அளித்தீர்களோ? பேஷ்!...அவன் யார் தெரியுமா?

**உமர் :** ஆண்டவனின் படைப்பு! நம்மைப் போன்ற ஒருவர்!

**கியாஸ் :** தேசத்துரோகி என்பதை அறிவீரா? நீங்கள் இழைத்தது ராஜத்துரோகம்.

**மெஹ்ரு :** குற்றுயிராக இருப்பவனுக்கு உதவுவது ராஜத் துரோகம் என்று தங்களிடமிருந்துதான் கற்றுக் கொள்ள வேண்டும்.

**ஹஸீனு :** அவருக்கு உதவாவிட்டால், ஆண்டவனுக்கு அல்லவோ துரோகம் செய்தவர்களாவோம்?

**கியாஸ் :** உங்கள் ஆத்மமற்ற பேச்சுக்களைக் கேட்க நான் வரவில்லை. இதன் விளைவு என்ன தெரியுமா— உமது சாவு.

**உமர் :** ஒருவருக்கு உதவி செய்து, அதனுல் என் சாவு என்ருல், அதே என் வாழ்வு.

**கியாஸ் :** ஹூம்...வாழ்வா?... பார்க்கலாம்...தோழர்களே. உள்ளே புகுந்து அந்தத் துரோகியை இங்கே இழுத்து வாருங்கள். உமரும் அவனுக்குத் துணையாக உடன் வருவாராம்.

**மெஹ்ரு :** இல்லை, எங்களிடம் அடைக்கலம் புகுந்தவர்களை நாங்கள் ஒரு போதும் காட்டிக் கொடுக்க மாட்டோம்.

[மெஹ்ருன் குறுக்கே வந்து நின்று, உள்ளே புக முயற்சிக்கும் கியாஸ் பேக்கின் ஆட்களைத் தடுக்க முயற்சிக்கிருள்]

**கியாஸ் :** (கேலியாக) காட்டிக் கொடுக்கமாட்டோம்!...ம்... (அதட்டி) குறுக்கே நிற்காதே! எங்களுக்கு வழி விடு.

**மெஹ்:** முடியாது.

**கியாஸ்:** முடியாதா!

[படாரென்று அறைந்து விடுகிறான்]

**மெஹ்:** (வலியால்) ஆ!

**கியாஸ்:** இப்பொழுது உள்ளே சென்று தேடுங்கள்.

[கியாஸ் பேக்கின் ஆட்கள் உள்ளே போய்த் தேடுகிறார்கள்]

**உமர்:** ஒரு பெண்ணின் முன், கை ஓங்க உங்களுக்கு வெட்கமாக இல்லை? இந்த அறை மெஹ்ருனின் கண்களைவிட உங்கள் கண்களைத் திறந்துவிட்டால் அது போதும்.

[சற்று நேரத்துக்குப் பிறகு உள்ளே சென்ற ஆட்கள் வெளியே வருகின்றனர்]

**அமீர்:** (தாமதித்து) யாருமில்லையே!

**கியாஸ்:** (கோபமாக) என்ன! யாருமில்லையா? அந்தச் சிறுமி பின் வாசல் கதவைத் திறந்து வைக்க அவன் ஓடிவிட்டானா?... ம் ...பார்க்கிறேன்...... அரசாங்கத்திலிருந்து பிச்சைக் கேட்டு வைத்தியசாலை நடத்தும் நீர், ராஜத்துரோகிக்கு இடமளித்து, அவனை உபசரித்து, அவன் தப்பி ஓடவும் வழி செய்திருக்கிறீர். ஸல்ஜூக் அரசாங்கத்தில் இதற்கு என்ன வெகுமதி என்று பாரும்.

**உமர்:** இலவசமாக ஆட்டம் பார்ப்பவர்களிடந்தான் கோபமும், முணுமுணுப்பும் அதிகம் என்பதையும் நான் அறிவேன்!

[இளக்காரமாக நகைக்கும் உமரைக் கியாஸ்பேக் முறைத்துவிட்டு, குதிரைமீது ஏறிப்போகிறான்]

## காட்சி 13

[நிஜாமுல்-முல்கின் தர்பார்—உமரின் விசாரணை நடக்கிறது]

**நிஜாம் :** உமர் கய்யாம்! சேனாதிபதி சொல்லுவது—அவ்வளவும் உண்மையா?

**உமர் :** உண்மையே. இந்தப் பாழும் உலகில் மிருகங்களும், மனிதர்களும் ஒரே விதமாகத்தான் வேட்டையாடப் படுகிறார்கள். மனிதனுக்கு மனிதன், இத்தகைய கல் நெஞ்சம் படைத்த செயலைப் புரிவது தர்மமல்ல என்று அறிந்து கொள்ளவில்லை.

**நிஜாம் :** நீங்கள் காப்பாற்றியவர் ராஜத் துரோகி என்பது அறிவீர்களா?

**உமர் :** ஆண்டவனுடைய சிருஷ்டியில் ஒரு சகோதரன்! அதோடு, உயிருக்கு மன்றாடும் நிலையில் என் உதவியை நாடினான்—இதைத் தவிர வேறொன்றும் எனக்குத் தெரியாது. அவன் யாரா யிருந்தாலும் என்ன? குற்ற மிழைத்திருந்தாலும், அதை ஆராய்ந்தறிய வேண்டியது என் வேலையல்ல! அதுவும் அத்தகைய சந்தர்ப்பத்தில் ஆண்டவனுக்கு ஊழியம் செய்வதில் அரசனுடைய உத்திரவு குறுக்கிடுமானால், முதலில் ஆண்டவன் கட்டளைக்குத்தான் நான் சிரம் பணிவேன்.

**நிஜாம் :** (கலங்கி) ஆண்டவனே! நான் என்ன செய்வேன் இப்பொழுது?

**உமர் :** உண்மையைச் சொல்லிவிடுகிறேன். நான் விரும்பி இருந்தால், ஹஸனை அவரைத் தப்பிவிடச் செய்ததைத் தடுத்திருக்கலாம். இதை நான் ஏன் சொல்கிறேன் என்றால், ஒரு நியாயாதிபதிக்கு அவசியமிருக்க வேண்டிய நான்கு குணங்களை வலியுறுத்தவே!

மரியாதையுடன் வாதங்களைக் கேட்பது, புத்திசாலித் தனமாகப் பதில் சொல்லுவது, ஆழ்ந்து சிந்திப்பது, பட்சபாதமின்றித் தீர்ப்பளிப்பது! இவையே அந்த அருங்குணங்கள்! என் நண்பர் நிஜாமுல்-முல்க் நீதிபதிகளுக்கெல்லாம் வழிகாட்டி என்பதில் எனக்குத் திடமான நம்பிக்கையுண்டு.

**நிஜாம் :** ஆண்டவனே! என் சகோதரருக்கு என் கையாலேயே ஓலை எழுத வேண்டுமா? மனச்சாட்சி இடமளிக்குமா?

**உமர் :** மனச்சாட்சி ஆத்மாவின் பண்பாடு—மனச்சாட்சிக்கு முரணாகச் செய்ய வேண்டாம். நானும் என் மனச்சாட்சிக்கு அடங்கித்தான் ஆபத்திலிருந்தவருக்கு உதவினேன் அந்த நாளில். குயவன் கை ஆட்டத்தாலே நேர்ந்த பிழை எனக்கு முறையாகப் படவில்லை. நிஜாமுல்-முல்க்! தாங்கள் தங்கள் கடமையைச் செய்ய வேண்டும். கடமையில் பாசத்திற்கோ, பந்தத்திற்கோ இடமில்லை.

**நிஜாம் :** உமர்! என்ன செய்வதென்றே எனக்குத் தெரியவில்லையே...யா...அல்லாஹ் இதென்ன சோதனை? என் அன்புக்கு எல்லை தெரியாமல் இருக்கும்போது...

**உமர் :** (மெதுவாக நகைத்து) என் வாழ்வுதான் எல்லை.

**நிஜாம் :** உமர்! இருளில் ஏகும் நான் வழியில் இடறி விழாமல் செல்ல யாதொரு தீபமும் இல்லையா?

**உமர் :** ஏனில்லை? ஞானம் இருக்கிறது. கடமை காட்டும் வழி எப்பொழுதும் ராஜபாட்டை! என் நிஜாமுல்-முல்க்கிடம் தேசத்தின் நியாய விசாரணை ஒப்படைக்கப்பட்டு இருக்கிறது. நான் அவர் நண்பன் என்ற அற்ப சுயநலத்துக்காக, அவர் கடமையை விட்டு நெகிழ்வார்

என்று நான ஏற்றும எதிர்பார்க்க மாட்டேன். நான செய்த பிழைக்கு உங்கள தண்டனையைத் தவறாமல் அளியுங்கள்.

**நிஜாம் :** (அழுது) என கையால் உங்களுக்கு மரண தண்டனை அளிக்கச சொல்லுகிறீர்களா ?

**உமர் :** (நகைத்து) எது மரணம ? ஒளியிலிருந்து இருள் உதயமாகுமானல், அறிவிலிருந்து அறியாமை அரும்பு மானல், அதுதான மரணம...என் சகோதரரே! தயவு செயது தீர்ப்பளியுஙகள.

**நிஜாம் :** (தழுதழுக்க) மரண தண்டனை ! இது ரமலான மாதம...இநத மாதத்தில் இத் தண்டனைக்கு இட மில்லே. ஈத் முடிந்த இரண்டாவது நாள யாஅல்லாஹ்! ...நான் எப்படி சுமப்பேன்...உமரை என் முன்னின்று உடனே கொண்டு போங்கள.

**உமர் :** நிஜாம ! தங்கள் நேர்மையைக் கண்டு இன்றுதான தாஙகள எனனுடைய உண்மையான நண்பரென்று பூரிக்கிறேன...நீங்கள ஏன் வருந்துகிறீர்கள் ? வெற்றி வாழ்க்கையின முடிவே சுவர்க்கம். ஒரு நற்செயலோடு என் வாழ்வு முடிவு காண்பது ஆண்டவன் எனக்கு அளித்த பாக்கியமாகும் !

**நிஜாம் :** (பதறி) உமர்கய்யாம்!

**உமர் :** இளவேனில் ரோஜாவின் இதழ் குவிகின்றதே, மணம வீசும் ஏடுகளை மூடத்தானே! பன்னீர்த் துளி களும் பிறகுதானே கிடைக்கின்றன ? தாங்கள் வருந்த வேண்டாம்...எழுதிச் செல்லும் விதியின் கை எழுதிக் கொண்டுதான் போகும்...எவ்வளவுதான் அழுதாலும் அதிலோர் எழுத்தை அழித்திட முடியுமா ?...

[நிஜாமுல்-முல்க் மயங்கி விழ, அவரை அப்புறப் படுத்துகிருர்கள். தர்பார் கலேகிறது. இந்தத் தண்டனை

அக்கிரமமானது என்று எல்லாரும் எண்ணினாலும், எப்படித் தவறானது என்று நிரூபிக்க இயலாமல் தவிக்கிறார்கள். எல்லாரையும் சாந்தமாகக் கலையும்படி உமர் வேண்டுகிறார். கலங்கியவாறு அவர்கள் போகிறார்கள். ஹஸீனாவும் மெஹ்ருனும் தங்கள் சோகத்தைத் தாளாது 'ஓ'வெனக் கதறியவாறு வந்து உமரின் பாதங்களில் விழுகிறார்கள்].

ஹஸீனா : *(அழுது) தாதா...இது என்ன தீர்ப்பு! நீங்கள் இறக்க வேண்டுமா? மரணத்திலிருந்து ஒருவரை மீட்டதற்காகவா இந்த வெகுமதி?*

உமர் : *ஹஸீனா! நீ சிறு குழந்தை. ஒன்றும் அறிய மாட்டாய். நான் தேடித் தேடிப் பார்த்ததெல்லாம திரை மேல் வந்த திரைதானே.*

ஹஸீனா : *(அழுதவாறு) இல்லை, அனாதையாக வைத்திய விடுதிக்கு வந்தேன். ஆதரவளித்தீர்கள். நான் உங்களை விடமாட்டேன். நீங்கள் போயவிட்டால் என் கதி?*

உமர் : *அன்று படைத்த அவன் மெலியாது உன்னைக் காக்க மாட்டானா? ஹஸீனா! மெஹருன் இருக்கும் வரை உனக்கென்னம்மா குறை?*

மெஹ் : *(அழுதவாறு) தங்களை விட்டுப் பிரிந்தும், நான் உயிருடன் வாழவேண்டும் என்பதுதான் தங்கள் நோக்கமா? உயிரைப் பிரிந்த உடல் என்றாவது வாழ்ந்ததுண்டா?*

உமர் : *மெஹ்ருன்! நீயும் ஹஸீனா போல் சிறு குழந்தையா? கல்லும முள்ளும் நான் கடந்து சென்றும, நான் கனியைக் காண வேண்டாமா? மண்ணை மண்ணில் உதறிவிட்டு, மாசு மறு ஒன்றில்லாமல் விண்ணுக்குப் போக வேண்டாமா? இத்தனை நாள் இந்தச் சிறையில்*

அடைந்து கிடந்ததற்கே இந்த ஆத்மா வெட்கமடை கிறதே, இன்னும வாழ்ந்து பாபத்தைக் குவிக்க வேணடுமா ?

மெஹ் : தங்களுக்குத் தண்டனை இட்டானே, அந்த சுல்தான் இறந்தாலென்ன ? தாங்களிருப்பதால் ஆயிரக்கணக்கான கிராமங்களுக்கும, லக்ஷக்கணக் கான மக்களுககும உதவுவீர்களே !

உமர் : அறியாப் பெண்ணே ! கேவலம் நான் இறந்தால் பூமியின் வயிற்றில் இன்னும் கொஞ்சம் மண்ணைச் சேர்ப்பேன். அவ்வளவுதான. ஆனல் சுல்தான் இறந் தால், நேரே சரித்திர புத்தகத்தில் ஏறிக் கொள்வார். இதை மறந்து விட்டாயா ?

ஹஸீனு : உங்களுக்கு மரணதண்டனை விதிக்க இவர்கள் யார் ? உயிர் கொடுக்க முடியாத போது, உயிர் வாங்க இவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது ?

மெஹ் : இல்லை. எங்களிடமிருந்து உங்களைப் பிரிக்க நாங்கள் ஒரு போதும் சம்மதிக்கமாட்டோம்.

உமர் : மெஹ்ருன்!...நீயும் ஹஸீனு போல் அறியாமல் பேசுகிறுய். ஹஸ்ரத் இப்ராஹிம, ஜகரிய்யா, இஸ் ஹாக் இவர்களெல்லாம் வாழ்ந்தார்களே, ஆண்டவன் நியதியை ஸ்தாபிக்க எவ்வளவு சிரமப்பட்டார்கள்? அவர்கள் எல்லாரும் இப்போது எங்கே ? பெரியவர் களின் வாழ்வையும் வேத நூல்களையும நன்கு பயின்ற நாம் இதற்கு அஞ்சலாமா? வாழ்க்கையின் முடிவில்லா ஏணி எங்கோ ஆரம்பமாகி எங்கோ போகிறது. மற்ற வர்கள் ஏறி வர, வழி விட வேண்டாமா ?

ஹஸீனு : தாதா (அழுகிருள்) உங்களை விட்டு நான் எப்படிப் பிரிவேன ?

**உமர் :** ஏனோ உலகில் வந்தேனா! முன் இருந்த இடம எது? காற்றோடும கதியேபோல், கண்ட கண்டபடி பாடி னேனா. வாடைககாற்று போல இப்போது நான வெளி யேறுகிறேன். எங்கு ஏகுவேனா? யாருக்குத் தெரியும?

**ஹஸீனு :** (மிகவும் துடிதுடித் தழுது) தாதா! இப்படி எல்லாம சொல்லாதீர்கள. நீஙகள எங்களை விட்டுப் பிரிந்து போகவே கூடாது! முடியாது!!

**உமர் :** ஹஸீனு! எனனைக் கலங்கச செய்யாதே, அம்மா. இந்தக கரைக்குப் பின, அதோ கதவு தெரிகிறது. ஆனால், சாவி ஒனறும காணவில்லை. கதவைத் திறந்து நான அப்பால் செனறுவிட்டால், எனன இருக்குமோ? யார் கணடாாகள? 'நான' 'நீ' எனகிறோயே, எத்தனை நாளைக்கம்மா? நானுமில்லை, நீயுமில்லை. யாதுமில்லை!

**ஹஸீனு :** (கதறியவாறு) யாதுமில்லையா? உஙகளை என்னால் மறகக முடியுமா, தாதா!

**மெஹ்ர் :** (அழுது) இந்தக குழந்தை தஙகளுக்காகத் துடிக்கிறதே, அது கூடத் தெரியவில்லையா?

**உமர் :** நயமான எழிலும, அமைதியான மனமும், இனன தெனறு அறிவிகக ஆண்டவன் உலகில் மலரைப் படைத்தான! அந்த மலர்களே உறங்கி உதிர்ந்திடும போது, நான்யார்? பாய் அஸ்கல்ப் எங்கே? நிற்கிறாயா, (ஆடு கத்துகிறது) இதோ நிற்கிறாயா? (கலங்கி) பாய்! இதென்ன உன் கண்களிலுமா கண்ணீர்? பதட்டமடையாதீர்கள்! ஆண்டவனை நமபுங்கள். அவனே நிரந்தரமானவன். கஷ்டம் வரும் ஒவ்வொரு வேளையிலும ஆண்டவனும் உடன வருகிறான் எனபதைமறந்து பேசுகிறீர்களே...

[ஏதோ சமாதானம் சொல்லி இருவரையும் அனுப்ப முயற்சிக்கிறார். அவர்கள் போகவே மறுக்கிறார்கள்.

பிறகு உமர் கட்டளையிட, அவர்கள் மனமின்றி அப்பால் போகிருர்கள். ஆனுல், சற்று நேரத்தில் மீண்டும் திரும்பி வந்துவிடுகிருர்கள். ஹஸீனு முன்னைவிட அதிகமாகக் கதறியவாறு, ஆசையும் அன்பும், கபடமின்மையும் தூய்மையும் பிரதிபலிக்க, அவருடைய கழுத்தைக் கட்டிக் கொள்ளுகிருள்]

**ஹஸீனு :** *(அழுது) தாதா முடியாது! நான் உங்களை விட முடியாது?*

**உமர் :** *ஹஸீனு! எங்கே அம்மா மறுபடியும் வந்து விட்டாய்?*

**ஹஸீனு :** *தாதா! உங்களை விட்டுப் பிரிந்து இருக்கவே முடியவில்லையே!*

**உமர் :** *ஹஸீனு! நீ சிறு குழந்தை! பச்சை மனதை இப்படி அலட்டிக் கொள்ளாதேயம்மா. வாழ்க்கை மது, துளித்துளியாய் மறைந்து போவதும், வாழ்க்கை இதழ் ஒவ்வொன்ருக வீழ்ந்து மடிவதும் இயற்கை அல்லவா?*

[திடீரென்று நக்ஷத்திரங்களின் சேர்க்கையைக் கவனிக்கிருர்]

**உமர் :** *ஆ... இதென்ன அறிகுறிகள்... நக்ஷத்திர சேர்க்கை ஏன இவ்வளவு பயங்கரமாகக் காட்சி அளிக்கிறது?*

**ஹஸீனு :** *என்ன தாதா?*

**உமர் :** *பல வருஷங்களாகக் கண்டிராத பெரும் புயல் ஈரானில்வீசப் போகுதம்மா.*

**ஹஸீனு :** *புயலடித்தாலென்ன? இடி வீழ்ந்தாலென்ன? வேட்டைக்குப் போகும் சுல்தான் இந்தப் புயலில் நன்ருக மாட்டிக் கொள்ள வேண்டும்.*

**உமர் :** ஹஸீனு ! அப்படிச் சொல்லாதேயம்மா. சுல்தான் இப்போது வேட்டைககுக் கிளம்புவது உசிதமில்லேயே!

**ஹஸீனு :** உங்களுக்கு இந்தத் தண்டனே அளித்தாரே அதற்காகவா !

**உமர் :** உன் சிறு இதயத்தில் இந்தக் குரோத மனப் பான்மை இருக்கக்கூடாது. நீ போய் காவலாளிகளை அழைத்து வா...நான் விபரமாகச் சொல்லுகிறேன.

[ஹஸீனு காவலாளி ரஹீமை அழைத்து வருகிருள்]

**ரஹீம் :** தாஙகள அழைத்தீர்களா ?

**உமர் :** ரஹீம ஸிக்கந்தர் ! இங்கு வா...சுல்தான் இன்று வேட்டைக்குக் கிளமபப் போகிருராம. இன்னும சில நாழிகையில் ஈரான் தேசத்தில் ஒரு பெரிய புயல் ஆரமபமாகிவிடும். அந்த மணற் சூருவளியின் வேகத் தின் முன எந்தப் படையும எதிர்த்து நிற்க முடியாது. ஒரே மணற் குன்றுகளாகிவிடும். தயவு செய்து அவரைப் போக வேண்டாமென்று சொல்லித் தடுத்து விடு ! நான் சொன்னதாகச் சொல்.

[ரஹீம் போகிருன்]

## காட்சி 14

[சுல்தான் மாலிக்ஷாவிடம் ரஹீம் கொண்டுவந்த செய்தி சேர்க்கப்படுகிறது, சுல்தான் உமர்கய்யாமின் எச்சரிக்கையை மதிக்கவில்லே]

**மாலிக்ஷா :** (பெரியதாகச் சிரித்து) மிகவும் அக்கரை யுள்ளவர் ! கியாஸ்பேக் !!

**கியாஸ் :** ஷா ஹின் ஷா.

**மாலிக் :** வேட்டைக்குக் கிளம்ப வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் செய்யப்பட்டு விட்டனவல்லவா ?

**கியாஸ் :** ஆம் ஹுஸூர் !......உமர்கய்யாம் ஏதோ உளறினார் என்று நாம் பின் வாங்குவது சரியல்ல.

**மாலிக் :** எதற்கும் ஆலோசனை செய்து...

**கியாஸ் :** பைத்தியக்காரர் பேச்சைக் கேட்டு நமது வேட்டையை நிறுத்த வேண்டாம் ஷா ஹின் ஷா.

**மாலிக் :** சரி! பின் கிளம்புங்கள்; போய்த்தான் பார்ப்போம்.

**கியாஸ் :** அப்படி ஏதும் நேர்ந்தால் இந்த அடிமை கியாஸ் பேக் எங்கு போய்விட்டான்? உயிரைக் கொடுத்தாவது தங்களைக் காப்பாற்றி விடமாட்டேனா ?

[வேட்டைப் பரிவாரங்கள் கிளம்பிப் போகின்றன. சற்று நேரத்தில் இலேசாகப் புயல் வீச ஆரம்பிக்கிறது]

**மாலிக் :** கியாஸ்பேக்! இது என்ன? சுழல்காற்று ஆங்காரமாக ஆரம்பமாகி விட்டதே !

**கியாஸ் :** (சற்றுப் பயந்து) புயல்காற்று சுழற்றிச் சுழற்றி அடிக்கிறதே ! என்ன செய்வது ?

**மாலிக் :** வானிலை ஆராய்ச்சியில் வல்லுநரான உமர்கய்யாம் சொன்ன வார்த்தை பலித்துவிட்டது ! அவர் வார்த்தையைக் கேட்காமல் நாம் புறப்பட்டது மிகவும் தவறாக அல்லவோ போய்விட்டது.

**கியாஸ் :** அவர் வார்த்தை என்று சொல்லுவதைவிட...

**மாலிக் :** நிறுத்தும் ! உன் போதனையால்தான் நான் மதியிழந்து புறப்பட்டேன். இல்லையெனில் தங்கியிருப்பேன். (புயல் அதிகமாக வீச) ஆ! மணல் மலைக்குள் நான் மறைந்துவிடுவேன் போலிருக்கிறதே ! கியாஸ் பேக் ! இங்கே தங்கிப் போக ஒரு இடமுமில்லையா'

[புயல் மிகவும் கடுமையாக வீசுகிறது. சுல்தானின் பரிவாரங்கள் தலைக்கொரு மூலையாகச் சிதறு கின்றன]

**கியாஸ்:** இந்த வட்டாரத்தில்தான் ஏதோ ஒரு கலாசாலை யும் ஒரு வைத்திய விடுதியும இருந்தன.

**மாலிக்:** இருந்தன எனறால், நாம விரைவில் அங்கு சேரா விட்டால் மணல் மலைக்குள மறைநதுபோய்விடுவோம். அதைக் கண்டு பிடிககாமல் அலைந்து பயனென்ன?

**கியாஸ்:** காற்றடிக்கும வேகம கண்ணை மறைக்கிறதே!

**மாலிக்:** உன்னைப் போன்ற முட்டாளுடன புறப்பட்டேனே, நான்தான் பெரிய முட்டாள. உமர் பேச்சைக் கேட்கா மல் போனதால், உயிருக்கே ஆபத்து எதிர் நோக்கி நிற்கிறது. என் பரிவாரங்கள போன இடம தெரிய வில்லை. ஆ!...அதோ தெரிகிறதே...அது என்ன இடம?

**கியாஸ்:** அதுதான் வைத்திய விடுதி, ஷா ஹின் ஷா

**மாலிக்:** யா அல்லாஹ்! உன் பெருமையை அறியாமல், கண்மூடி அகம்பாவத்துடனிருந்த எனக்கு நல்ல தண்டனை கிடைத்தது. இனியாவது உன ஞாபகம் இருக்கும்.

[சூறுவளி மிகவும் அதிகமாகித், தணிகிறது]

## காட்சி 15

[வைத்திய விடுதியில் சேவை செய்து வந்த மெஹ்ருனின் தோழிகளான மும்தாஜ், ஷௌபின், ஸாரிதா முதலியவர்களிடம், கியாஸ்பேக் மிகவும் சந்தோஷமாக உமர்கய்யாமுக்கு நேர்ந்துள்ள கதியைச் சொல்ல அந்த நாரிமணிகள் பதறுகின்றனர்]

மும்தாஜ் : என்ன ? நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் ?

கியாஸ் : உங்கள் உமரின் வேதாந்தத்துக் கெல்லாம் முடிவு நெருங்கிவிட்டது என்றே சொல்லுகிறேன் !

ஸாரிதா : எப்படி?

கியாஸ் : அவர் வேதாந்தக் கவிஞராக இருக்கலாம்! அதற்காக, ஷா ஹின ஷா சுல்தான மாலிக்ஷா அவர்களுக்கு விரோதமாகக் காரியங்கள் செய்யலாமா ?

ஸாரிதா : தாங்கள சொல்லுவது புரியவில்லையே.

ஷௌ : இங்கிருந்து எங்கள் உமர்கய்யாமை அழைத்துச் சென்றீர்களே, அவர் எங்கிருக்கிறார் ?

கியாஸ் : சிறைக்கூடத்திலிருக்கிறார்.

மும்தாஜ் : என்ன சிறைக்கூடமா ?

ஷௌ : ஏன ?

கியாஸ் : இன்று ரமலான மாதம் 29-ம் நாள! இன்னும் இரண்டு நாட்கள்தானிருக்கின்றன. அப்புறம் அவர் இவ்வுலகத்தை விட்டுப் பிரிந்துவிடுவார்.

ஸாரிதா : இது அக்கிரமம! அநியாயம ?

மும்தாஜ் : இதற்கு நாங்கள ஒப்பவே மாட்டோம். அவர் தவறான காரியம ஒன்றும் செய்யமாட்டார்; செய்யத் தெரியாது.

ஷௌ : இந்த தண்டனைக்குக் காரணம என்னவென்று ஷா ஹின ஷா சுல்தான மாலிக்ஷா அவர்களையே கேட்போம.

[ஷா ஹின் ஷாவிடம் பெண்கள் ஓடுகின்றனர்]

மாலிக் : பெண்களே ! இதென்ன பதட்டம் ?

**ஷௌ :** தாஙகள் இந்த தேசத்தின் ஷா ஹின் ஷாவாக இருக்கலாம்.

**மும்தாஜ் :** அதற்காக நாட்டில் எங்கும அநீதி பரவிக் கிடப் பதைத் தங்களிடம சொல்லாமல் இருக்க முடியாது.

**மாலிக் :** பதறுமல் சொல்லுங்கள்! நான் உங்களுக்கு என்ன தவறிழைத்தேன ?

**மும்தாஜ் :** கோடிக்கணககான மககளில் மூவராகிய கேவலம் எங்களுக்குத் தவறிழைத்தால் தானென்ன ?

**ஷரீதா :** நாட்டின் அரிய பொக்கிஷமான எங்கள உமரை அல்லவோ தண்டித்து விட்டீர்கள்,

**மாலிக் :** செய்த குற்றத்திற கேறற தண்டனை தானே ?

**ஷௌ :** (இளக்காரமாக) துடித்து வந்தவருக்குத் தஙக இடம் கொடுப்பது தங்கள ராஜ்யத்தில் குறறம போலும் !

**மாலிக் :** தங்க இடம் கொடுப்பதில் தவறில்லை. எமை பகைவன் எனறறிந்தும், அவன் தப்பி ஓடுமவரை அசிரத்தையாக இருந்தது குறறமில்லையா ?

**மும்தாஜ் :** தங்கள பகைவரா! யார் சொன்னது ?

**மாலிக் :** கியாஸ்பேக்தான் சொன்னுரே...

**ஷௌ :** ஆம்...தங்களிடம் மட்டும் இப்படிச் சொல்ல வில்லை. உமர்கய்யாமிடமும் இவ்விதமே சொல்லி, அவ ரையும் நம்பச் செய்தார்.

**ஷரீதா :** ஆனுல், வந்தவர் உண்மையில் யார் தெரியுமா ?

**மாலிக் :** யார் ?

**ஷௌ :** தங்கள் ஆத்மார்த்த நண்பர் ஷேக் ஹுஸைன்

**மாலிக் :** ஆ !...ஷேக் ஹுஸைனு ?

**மும்தாஜ் :** ஆம், அவர் மீண்டும வந்தார். பிறகு தான் நாங்கள் அறிந்தோம்...அவரை அமபுவிட்டு கொல்லப் பார்த்தாராம் தங்கள் கியாஸ்பேக

**மாலிக் :** ஷைத்தான் ! அவரையா கொல்லப் பார்த்தான் ? ஏன்?

**ஸாரிதா :** அவர் தங்களிடம வந்து சேர்ந்துவிட்டால் இவருடைய சாயம வெளுத்துவிடுமல்லவா ?

**மும்தாஜ் :** பிறகு இவருடைய செல்வாக்கு எவ்வளவு குறைந்து போகும்? இதுவன்றி உமர்கய்யாம் அவர்களைச் சிக்க வைக்க. இதைவிடவா நல்ல சந்தர்ப்பம் கிடைக்கப் போகிறது ?

**மாலிக் :** ஆ!...எத்தகைய பாவமான காரியம் செய்தேன். சற்றும சிந்தித்துப் பார்க்காமல்...

**ஷௌ :** அது போகட்டும். தங்களை நான் இன்னொரு கேள்வியும் கேட்கலாமா ?

**மாலிக் :** என்ன ?

**ஷௌ :** தாங்கள் உயிருக்குப் பயந்தோடி வந்தீர்கள் !

**மாலிக் :** ஆம்.

**ஷௌ :** இந்த விடுதியின் கதவு மூடி இருந்தால், தாங்கள் என்ன செய்வீர்கள் ?

**மும்தாஜ் :** தாங்கள் மன்னரென்று நாங்கள் நம்பாமல், எதிரியென்று தங்களை அப்படியே அனுப்பியிருந்தால்?

**மாலிக் :** யா அல்லாஹ்!

**ஸாரிதா :** மேலும், இது யார் விடுதி என்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள் ?

**மும்தாஜ் :** நீங்கள் யாருக்கு மரண தண்டனை விதித்து ஆனந்தமாக வேட்டையாடிப் பொழுதுபோக்க வந்தீர்

களோ, தண்டனை பெற்றும தஙகளுக்குத் தீஙகு நேரக் கூடாதென்று யார் தஙகளிடம புயலைப் பறறி எச்சரிக் கை செய்தாரோ, அநத உமர்கயயாம நிர்மாணித்த வைத்திய விடுதிதான்.

**மாலிக் :** ஆ...அவர் விடுதியிலா எனக்கு உயிர்ப் பிச்சை கிடைத்தது...அவர் தனறுடைய விடுதியில் என்னைக் காப்பாற்றினா...

**ஷெள :** ஆனல் நீஙகளோ . ?

**ஸாரிதா :** உதவியவருக்கு மரண தணடனை!

**மும்தாஜ் :** இங்கு, இந்த விடுதியிலுள்ளவர்கள எல்லாரும் எவவளவு கோபங்கொணடிருககிறார்கள் தெரியுமா?

**மாலிக் :** பொறுங்கள்......பொறுஙகள்......என் அறியா மையை நான் நன்குணர்நதேன். இதோ உடனே புறப்படுகிறேன். வாழும்போது பூ போலத் தோன்றும மனசசானறு, சாகுமபோது பாமபு போலல்லவா படம விரித்தாடுகிறது.

[சுல்தான் மாலிக்ஷா மிகவும் அவசரமாகத். தம் குதிரைமீது ஏறிப் போகிறார்]

## காட்சி 16

[மெஹ்ருன் மிகவும் ஆத்திரத்துடன் நிஜாமுல்-முல்கிடம் வாதிக்கிருள்]

**மெஹ் :** எஙகள் உமர்கய்யாம் உங்களை நாடி வந்தார், நீங்கள் அவருக்கு அளித்தது என்ன?

**நிஜாம் :** (மிகவும் மனக்கஷ்டத்துடன்) என்னை ஏன் சித்திரவதை செய்கிருய்? நான் படும் மனோவேதனை போதாதா?

**மெஹ்ற் :** உங்கள் தோழர் உங்களைத் தேடி வந்தார். உங்கள் உதவியை நாடினார். ஏழைகளுக்குத் தம்மை அர்ப்பணித்தார். நீங்களோ உங்கள் வாய் மூலமே 'சாவு' என்ற தண்டனை அளித்தீர்கள்.

**நிஜாம் :** கடமையின் விளிம்பில் நிற்கும் நான் வேறு என்ன செய்ய இயலும்? இரவு பகல் என்ற சதுரங்கப் பலகையில் ஆண்டவன் விளையாடும் கணக்கற்ற பொம்மைகள் நாம் .....அங்கும் இங்கும் நகர்வதும், அடைபடுவதும், வெட்டுவதும், வெட்டப்படுவதும்,... மறைந்து இறந்து, உறங்கிப் போவதும்...நாம் விதி விலக்கா?

**மெஹ்ற் :** உமர்கய்யாம் எத்தகைய மகான்! இவரைப் போன்றவர் உலகில் எத்தனை பேர்?......சிறையில் எவ்வளவு உயர்ந்த கணித நூல் தயாரித்துக் கொடுத்திருக்கிறார்!......காலத்தின் பஞ்சாங்கத்தை நிர்மாணித்தாரே, அவர் அறிவு எத்தனை விசாலமானது? இவர் மறைந்தால், உலகில் எத்தகைய செல்வம் மறைந்து போகும்? இவைகளில் ஒன்றை யாவது நீங்கள் எண்ணிப் பார்க்கவில்லையா? இவரை அண்டியுள்ள ஆயிரக் கணக்கான ஏழைகளும், மனப் பாரம் தாங்காமல் இவருடன் மடிவார்களே.

**நிஜாம் :** மெஹ்ருன் என்னுடைய நிலைமையை நன்றாக உணர்ந்தும் நீ இப்படி என்னை வதைத்தால் நான் என்ன செய்வேன்? யா...அல்லாஹ்!...

**மெஹ்ற் :** (கெஞ்சியவாறு) இன்னும் நேரமிருக்கிறதே, உதவி செய்யலாகாதா? தாங்கள் அவரை சிறைக் கோட்டத்தி லிருந்து வெளியேற்றி விட்டால், நான் மற்றவைகளைப் பார்த்துக்கொள்வேன்.

**நிஜாம் :** என் அரசன், என்னை நம்பி, என்னிடம் நாட்டின் நீதியை ஒப்படைத்து, வேட்டைக்காகப் போயிருக்

கிருர். நான் மன்னருக்குத் துரோகம் செய்வதா? ஒருக்காலும் செய்ய மாட்டேன்.

மெஹ்: உண்மையான நண்பருக்கு மட்டும் துரோகம் செய்யலாமா? ஈரானின் ஒப்பற்ற மாணிக்கத்துக்கு உயிர்ப் பிச்சை அளிக்கத் தவறுவது தேசத்துக்கு இழைக்கும் துரோகமல்லவா?

நிஜாம்: பிச்சை அளிக்கச் சக்தியற்றவனுக இருக்கிறேனே மெஹ்ருன்!...இனி உன்னிடம் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை.

மெஹ்: எனக்கும் தங்களிடம் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. இனி சொல்லவேண்டியது ஆண்டவனிடம். சொல்லிக்கொள்கிறேன். யா...அல்லாஹ்! என் துஆவை ஏற்றுக்கொள்ளமாட்டாயா?

## காட்சி 17

**[உமர்கய்யாமின் தண்டனை நிறைவேற்றப்படும் சமயத்தில், நிஜாமுல்-முல்க் தம் மனோதிடத்தை இழந்துவிடுகிருர்]**

நிஜாம்: (வருத்தத்துடன்) உமர்கய்யாம்...

உமர்: நிஜாமுல்-முல்க்! நண்பர் என்று நான் பெருமையடையக்கூடியவர் நீங்கள் ஒருவர்தான். கடமையிலிருந்து ஓரிழையும்பிசகாமல் எனக்குரிய தண்டனையை அளிக்கத் தங்களுக்கு எத்தகைய மனப்பக்குவம் வேண்டும். தாங்கள் சற்றும் வருத்தப்படாதீர்கள். நாம் வாழும் நாட்கள் சில தானே!

உமர்கய்யாம்!

உமர்: நிஜாமுல்-முல்க்! நாம் காணும் கனவெல்லாம் சரியாகத்தான் போகிறது! பேணிப் பெருமை தரும்

பெருங்கனவுகூட...பாலைவனுந்திரத்துப் பனி ஒளி போல், சற்று நேரத்தில் எப்படிச் சிதறிப் போய் விடுகிறது ?

நிஜாம் : உமர்! உலகத்தை ஆண்டவன் ஆள்கிறுன். ஆனல் நடத்துவது வைஷத்தானதான ?

உமர் : அப்படியெல்லாம் சொல்லாதீர்கள்.

நிஜாம் : (அழுது) யா அல்லாஹ! இந்நிலையில் நான் என்ன செய்வேன் ?

உமர் : என்னுடைய கடைசி கோரிக்கைகள் மூன்றுதான். தயவுசெய்து அவைகளைப் பூர்த்தி செய்யவேண்டும். என் மறைவுக்காகச் சிறிதும் கலங்கக்கூடாது. என் தோழரான நீங்கள் எனக்காகச் சாமபிராணி போட வேண்டும். என் கப்ருஸ்தானின் பக்கத்தில் உட்கார்ந்து எனக்காகப் பிரார்த்தனை புரியவேண்டும்...ம...ஆண்டவனின் அழைப்பு இனி வெகு சமீபம்தான். தாங்கள் தாராளமாகக் கயிற்றை இழுங்கள்.

[சுல்தான் மாலிக்ஷாவின் குதிரை மிகவும் வேகமாக ஓடிவந்து நிற்கிறது]

மாலிக் : (வந்துகொண்டே) நிறுத்துங்கள். என்னை நரகத்துக்கு அனுப்பும் இந்தத் தண்டனையை உடனே நிறுத்துங்கள்.

குரல்கள் : ஆ! ஷா ஹின் ஷா! சுல்தான் மாலிக்ஷா ?

மாலிக் : உமர்கய்யாம! ஈரான் பெற்றெடுத்த ஒப்பற்ற மணியே, என்னைத் தயவுசெய்து மன்னிப்பீர்களா? இத்தனை நாட்கள் பட்ட இன்னல்களுக்காக, இந்த எளியவனை அல்லாஹ்வுக்காக மன்னிப்பீர்களா ?

[சுல்தான் மாலிக்ஷா உமர் முன் தலைகுனிகிருர்]

உமர் : ஷா ஹின் ஷா ! என்ன இது?......ஆண்டவனின் நீதி மெதுவாகத்தான் நகரும். ஆனல், ஒருபொழுதும்

வழியில் தங்குவதில்லை என்பது தாங்கள் அறியாததா?

**மாலிக் :** தங்கள் ஷா ஹின்ஷா! எத்தகைய பாவம் செய்ய இருந்தான? என்னைப் பாபக் குழியில் தள்ள முயற்சித்த இந்தக் கியாஸ் பேகனை இந்தக் கழு மரத்தில் ஏற்றுங்கள்.

**உமர் :** ஏன? என்ன தவறு செய்ததற்காக?

**மாலிக் :** உங்களுக்குச் சலியாமல் இழைத்த தீங்குகளுக்காக! இவன உங்களுடைய பரம வைரி!

**உமர் :** என்னுடைய எதிரியா? (சிரித்து) என்னுடைய எதிரிதானே? சரி, அவரை நான மன்னித்து விடுகிறேன. விட்டுவிடுங்கள். எனக்கு உலகில் யாருமே விரோதியில்லை. அப்படி இருந்தாலும் அவரைப் பழிக்குப் பழி வாங்கி நல்வழிப்படுத்த முடியாது. அவரை அன்பாலும் அஹிம்சையாலும் ஆட்கொள்ளவேண்டும். அவரை விட்டுவிடுங்கள்.

**மாலிக் :** ஆஹா!...இத்தகைய பரந்த மனோபாவம் படைத்த உயர்ந்த கவிஞர் என் ராஜ்யத்தில் என் பக்கத்தில் இருப்பதைவிட எனக்கு வேறு பொக்கிஷம் வேண்டுமா?

**[அப்போதுதான் விஷயமறிந்த ஸுல்தாளு விரைந்தோடி வருகிருர்]**

**ஸுல்தாளு :** சுல்தான் வேட்டைக்குச் சென்றபோது நானும் என தந்தையாரைக்காணப் புறப்பட்டுவிட்டேன். நான் இல்லாதபோது என்னென்ன விரும்பத்தகாத சம்பவங்களெல்லாம நடந்துவிட்டன. அதற்காக எங்கள் மனம் எவ்வளவு கலங்குகிறது. அதற்குப் பிராயச்சித்தமாகத் தங்களை எங்கள் அரண்மனையிலே எங்கள் ஆப்த நண்பராக வைத்துக்கொள்ள விரும்புகிறோம்.

எங்களுக்குப் பிராயச்சித்தம அளிக்கும வகையில், எங்களை நீங்கள் மன்னிக்கும முறையில், நீங்கள் எங்கள் கோரிக்கைக்கு உட்பட்டுததான் ஆகவேண்டும். (பெரு மூச்சுடன் மெதுவாக) எத்தகைய விரும்பத்தகாத சமபவங்கள் நடந்து விட்டன!

உமர்: (மெதுவாக நகைத்து) பேகம ஸாஹிபா! ஆண்டவனாலும ஆகாத காரியம் ஒன்று உண்டு—நடந்ததை நடவாததாகச் செய்ய அவனாலும் முடியாது. இதற்கு இனி வருந்தி என்ன பயன்?

ஸால்தானு: ஆனால், உங்களுடைய வாழக்கையில்...

உமர்: வாழ்க்கையிலே நாம செய்யவேணடிய காரியம், மற்றவர்களைவிட முனனேறிச் செல்வது அல்ல! நம்மைவிட நாமே முன்னேறிச செல்வதுதான்.

மாலிக்: அப்படியென்றால், தாங்கள் என்னதான் சொல்லுகிறீர்கள உமர்கய்யாம்?

உமர்: ஷா ஹின் ஷா, மன்னிக்க வேண்டும. ராஜ்யப் பதவியோ அல்லது ராஜாங்க அனுசரணையோ எனக்குத் தேவையில்லை...நான் விருமபவும் இல்லை.

நிஜாம்: உமர்கய்யாம! பின், எஙகளை விட்டுப் பிரிந்து போவதாகவா சொல்லுகிறீர்கள?

உமர்: ஆம...எங்கிருந்தோ வந்து சில காலம உங்களுடன் தஙகியிருந்தேன். இனி விட்ட வழியைத் தொடர்ந்து போக வேண்டியதுதானே முறை?

ஸால்தானு: இல்லை, எங்கள் போக்கைக்கண்டு வெருண்டு தாங்கள் ஏகுகினறீர்கள்.

உமர்: மன்னிக்கவேண்டும் பேகம் ஸாஹிபா! நான் நன்றாக ஆராய்ந்தே இந்த முடிவிற்கு வந்தேன். ஆராய

7

இயலாதவன் குருடன்; ஆராய மனமில்லாதவன் மடையன்; ஆராயப் பயப்படுகிறவன் அடிமை.

**மாலிக்தாஜு:** அப்படி யென்றால் எங்களுக் கெல்லாம் மன்னிப்பே கிடையாதா?

**உமர்:** ஏன் இல்லை? மனிதன் பிறரை மன்னிக்கத்தான் முதலில் கற்றுக்கொள்ளவேண்டும். ஆனால், தனை ஒரு நாளும் மன்னிக்கக் கூடாது.

**மாலிக்:** உமர்கய்யாம்! ராஜாங்க கஜானாவைத் தங்கள் காலடியில் வைக்கிறேன். அதைக் கொண்டு, தாங்கள் மக்களுக்காகச் சேவை செய்ய இயலாதா?

**உமர்:** (மெதுவாக நகைத்து) எப்படி முடியும் மன்னா? தங்கத்தைக் காய்ச்சி தைலத்தை இறக்கினாலும் தலை வலிக்கு அது மருந்து ஆகுமோ? ஆண்டவன் அருள் உங்கள் அனைவருக்கும் கிட்டுமாக! நான் போய் வருகிறேன.

**மாலிக்:** செல்வத்தால் நாங்கள் உதவ முடியாது என்று சொல்லுகிறீர்களா? ராஜாங்க உதவி உங்களுக்குப் பயனுள்ளதாக இருக்காதா? இதனால் உங்கள் வேலைகள் சற்றுச் சுலபமானால் உங்களுக்கு இன்ப மேற்படாதா?

**உமர்:** (நகைத்து) ஹும்! செல்வம்! பதவி!...இன்பம்! அப்துர் ரஹ்மான் என்ற கலீபா சுமார் அரை நூற்றுண்டு காலத்துக்கு ஒரு பெரிய அரசாங்கத்தைத் திறமையுடன் ஆட்சி புரிந்து வந்தாரே, அவர் என்ன வாழ்ந்தார்! அவரிடம் மிகவும் சக்தி வாய்ந்த ராணுவ மும் கடற்படையும் இருந்தன. யாரும் அவரை எதிர்க் கத் துணியவில்லை. சுல்தான்களுக்கெல்லாம் சுல்தா ஞக இருந்தார். அவருக்கு 625 மனைவிகளும், அதே எண்ணிக்கையில் குழந்தைகளும் இருந்தனர். எவ்வள வோ ஆடம்பரமான வாழ்க்கை நடத்திய அவர் இறந்த போது சுமார் நூறு கோடி பொன் நாணயங்களுக்கு

மேல் விட்டுச் சென்றார். அவர் இன்பம் அனுபவித்தாரா? "என்னுடையமகத்தான ஆட்சிகாலம் முழுவதிலும், நான் உண்மையான சுகத்தை அனுபவித்த நாட்கள் பதினான்குதான்!" என்று தம்முடைய வஸிய்யத்தில் எழுதிச் சென்றாரே, எவ்வளவு மனம் நொந்து எழுதி இருக்க வேண்டும்? இதுபோன்ற வாழ்வும் ஒரு வாழ்வா?...இந்தச் செல்வத்தாலும் பதவியாலும் இன்பம் கிட்டி விடுமா?

**மெஹ் :** ஆம், ஷாஹின் ஷா! நாங்கள் வருகிறோம்...உமர் கய்யாம் ஒரு தேசத்தைச் சேர்ந்தவரல்ல; உலகத்தைச் சேர்ந்தவர். உலகத்தின் சேவகர். அவர்கவிதைக்காகச் செய்யும் தொண்டு, மருத்துவக் கலையில் புரியும் பணி, வானிலை ஆராய்ச்சியில் செய்யும் சாதனை, இன்னும் பல்வேறு கலைகளில் அவருடைய தேர்ந்த அறிவு, உலகம் உள்ளவரை நிலைத்து நிற்கும்.

**உமர் :** அதெல்லாம் ஏன் மெஹ்ருன்? அறிய முடிந்ததை அறிவது, அறிய முடியாததை அமைதியாகப் போற்றிப் பாராட்டுவது — இவைதான் அறிவு படைத்த மனிதனுக்கு உன்னத இன்பம் அளிக்கும்!

**மெஹ் :** சரி...வாருங்கள்...போகலாம்...

**உமர் :** மெஹ்ருன்னிஸா...நீயும் தயவுசெய்து அப்பால் போ...ஒரு பெண்ணின் இதயத்துக்கு மிகவும் நெருக்கமானது அவளைத் தாயாக்கும் குழந்தையின் வாய் இதழ்தான்...நீயும் போகலாம்...இந்த உமர் தன்னுடைய உலகிலே இனி சுயேச்சையாக உலாவ விரும்புகிறான். இனி ஒரு நாளும் கட்டுப்பட சம்மதிக்க மாட்டான்...பாய் அஸகல்ப்!... (பெருமூச்சு) ஹும்! தன் ஆயுட் காலம் முழுவதும் என்னுடன் துணையாக இருந்த ஆட்டைக்கூட ஆண்டவன் சில தினங்களுக்கு முன் பிடுங்கிக் கொண்டான. எனக்கு உலக

பந்தம் ஒன்றும் இருக்கக் கூடாது என்றுதான் அவ்விதம செய்திருக்கிறுன் போலும்...ம்...நான் வருகிறேன ! உலகை என் பாதங்களால் அளந்து ஆண்டவன் புகழை இயன்றவரை பாடுகிறேன்.

இந்த ஆட்டை இழந்த வருத்தத்தை மட்டும் ஏனே பொறுக்க முடியவில்லே. ஆனல், என் பாதைக்கு வழிகாட்டும ஒரே கைவிளக்கு என்னிடமுண்டு...... அதுதான் என அனுபவம...ரோஜா மலர்களேயே விருமபி அவைகளின சுகந்தத்தையே போற்றி வந்த நான், என் வாழ்வினபோது இலேசான பன்னீர் மணத்தையாவது என் சேவை மூலம் விட்டுச் சென்ருல், அதுவே என் வாழ்வை மணம் பெறச் செய்துவிடும.

வாழ்க்கையின் வெற்றி வழிகாட்டி குர்ஆன ஷரீப். திருக் குர்ஆன் வாழ்க்கையின் வழி காட்டி மாத்திரமல்ல; இயற்கையின் இனிய இன் பத்தையும கூட அருவி நடையில் வழங்கி இருககிறது. ஆயாத்துக்களேப் படிக்கும்போது தென்றலின புன முறுவலேக் காண்கிறோம்; மணற்பரப்பின் கீதத்தைக கேட்கிறோம ; காடுகளின இரகசியத்தை அறிகிறோம் ; கடலின ஆர்ப்பரிப்பை உணருகிறோம்.

நக்ஷத்திரஙகள் ஜ்வலிக்கும் வான மண்டலம், கரிய இரவைத் தொடர்ந்துவரும் குளுமையான காலே ஒளி, குமுறும் கடலில் ஒய்யாரமாக மிதந்து போகும் கலம, மண்ணே மிதிக்காமல் ஆகாயத்தை ஊடுருவிச் செல் லும புள்ளினம், அடிவானத்தைப் பிடிக்க முயற்சிப்பது போல், தூசி உலகில் மறைந்தோடும் ஜாதிக்குதிரை, மௌனமாகவே தியாகத்தின் களிப்பை எடுத்தோதும் மெல்லிய ரோஜா, அஸ்திவாரத்தைச் சுமக்க எப்பொழு தும் தயாராக இருக்கும் தனிக்கல், சிற்றத்தின் சுழலி

லிருந்து எளிமையின் தண்மைவரை வியாபித்திருக்கும் காற்று, உலகை எரிக்கும சக்திவாய்ந்த தழல், கட்டுப் பட்டுச் சேவை செய்யும பணிவு, கரைவரை எட்டிப் பார்த்து மக்களின் அகங்காரத்தைக் கண்டு எள்ளி நகையாடும சமுத்திரககரை, பாசத்தையும காதலையும் தாய்மையையும முறையே கொண்ட ஆரணங்கின் தூய பார்வை, விலை மதிப்பற்ற பொக்கிஷத்தைத் தன் புன்முறுவலாகக் கொண்ட கபடமற்ற குழந்தை, பிர மாண்டமாக வளர்ந்து நூற்றுக் கணக்கான உயிரினங் களுக்கு இடமளிக்கும விருக்ஷங்கள், வளைந்து கொடுக் கும் வீரம, உலகின இனிப்பையெல்லாம் தனனுள் கொண்டு பழுக்கும பேரீச்சம்பழம்—எல்லாம அல் லாஹ்வின புகழையே எடுத்துரைக்கின்றன. காலையில் மனோரமயமான வர்ணஙகளுடன் தென்படுகிறான்! உச சியில் அவன் பண்பைப்பிரதிபலிக்கும் செந்நிறத்தையும தன்னுள கொள்ளும் வெண்மை! மாலையோ நிர்மலமான நீலம்! எல்லாம் அவன் பெருமையையே பாடுகின்றன. எல்லாரும் தயவு செய்து என்னை மன்னித்துக் கொள் ளுங்கள். நான் சென்று வருகிறேன்.

மெஹ்: (கதறியவாறு) என்னைவிட்டு நீங்கள் பிரியத்தான் வேண்டுமா?

உமர்: அழாதே மெஹ்ருன்! நாம் அழப் பிறக்கவில்லை; வாழ்! மற்றவர்களையும் வாழ வழிவிட.

மெஹ்: ஆனால்......

உமர்: அந்திவானத்தைவிட அழகானதும், அழியக் கூடி யதும் உலகில் ஒன்று உண்டானல் அது பெண்ணின் இனிய முகந்தான் என்பதை நீ நிரூபிக்கிறாய். உன் அழகிய முகம் எவ்வளவு வாடிவிட்டது! ஆ ன ல் இதைத் தெரிந்து கொள்—வாழ்க்கையிலிருந்து மரணம் வரை மனோ திடத்தோடு வாழப்பிறந்த

மகோன்னதச் சித்திரந்தான் இந்தப் பெண் வடிவம். இதோடு, நான் முன்பு சொன்னதையும் ஞாபகப் படுத்திக் கொள்—ஒரு பெண்ணின் தூய இதயத்துக்கு மிகவும் நெருக்கமானது அவளைத் தாயாக்கும் குழந்தையின் வாய் இதழ்!...நான் வருகிறேன்...(போய்க் கொண்டே) மரணத்தை நான் மறந்தவனல்ல; மரணத்தை மறந்துவிட்டால் இதயம் துருப்பிடித்து விடும் என்பதை உணர்ந்தவன்! நான் மரணத்தைக் கௌரவிப்பவன் — அதாவது வாழும் ஒவ்வொரு நாழிகையையும் உண்மையாக வாழ்ந்து!

**பல்:** எங்கள் இனிய அறிஞரை விட்டு இன்று பிரிவது, எங்கோ அதலபாதாளத்தில் வீழ்வது போலிருக்கிறதே!

**உமர்:** (தூரத்தில்) எப்போதும் கீழே விழாமல் இருப்பது புகழுக்குரியதல்ல; விழும்போதெல்லாம் விழித்தெழுவதுதான் பெரும் புகழ்....(நகைத்து) என்னுடைய அறிவுஞானம் இன்றுதான் உண்மையாகத் துவங்குகிறது. முழந்தாளிட்டு உயிரோடு இருப்பதைவிட நின்று கொண்டே இறப்பது மேல் என்று தெரிந்து கொண்டேனல்லவா.

"மங்கையும் மதுவுந்தான் என் குறிக்கோள்" என்று என்னுடைய நண்பர்களில் பலரும் திரை மறைவில் என்னைத் தூற்றினார்கள்—தூற்றுகிறார்கள். என் முன்னாலேயே தூற்றினாலும் முகம் சுளிக்க மாட்டேன். ஆண்டவன்தான் என் காதலி; அவனிடம் நான் செலுத்த விரும்பும் பக்தியே எனக்குப் போதையூட்டும் மது! என்னை விட்டுப் பிரிந்துபோன என்னுடைய ஆடு அஸ்கல்புக்கு இது தெரியும்......நல்ல பண்பாடு, தெளிந்த அறிவு, இதயபூர்வமான பிரார்த்தனை—இவை மூன்றுமிருந்தால் மன நிம்மதி மாத்திரமல்ல, தியாக புத்தியும் தானே ஏற்படும். தன்னுடைய

*இதழ்களையே கசக்கிப் பிழிபவர்களுக்கும் பன்னீர் மணத்தை அளிக்கிறதே ரோஜாமலர், அத்தகைய தியாகபுத்தி ஏற்படும்! நான் வருகிறேன்......என் கணகளில் துளிர்க்கும கண்ணீரை, ஏழை மக்களின் கண்ணீருடன் கலந்து, அவர்களது சுக துக்கங்களில் பங்கெடுத்துக்கொள்வதே, இனி என்னுடைய எஞ்சிய வாழ்வின பன்னீர் மணம!*

[எல்லோரும் கலங்கி நிற்க, பன்னீர் மணத்துக்காக மலர்கள் செய்யும் தியாகம்பற்றி உமர்கய்யாம் பாடிய வாறு அடிவானத்துக்கு அப்பால் போகிறார்]

